






جمعية الدعـــــوة والإرشاد
وتوعية الجاليات بالأحســـــاء
AL-AHSA ISLAMIC CENTER


تاميلي

# لماذا الإسلام ؟

# இஸ்லாம் ஏன்? எதற்காக?


تأليف: فاتن صبري
ترجمة : امتياز يوسف

# لماذا الإسلام؟
# இஸ்லாம் ஏன்? எதற்காக?


تأليف: فاتن صبري

நூலாசிரியை: பாதின் சப்ரிய்

ترجمة: M.S.M إمتياز يوسف

தமிழில்:
M.S.M இம்தியாஸ் யூசுப்

***فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر***

جمعية الدعوة با الأحساء
لماذا الإسلام؟ : باللغة التاميلية. / جمعية الدعوة با الأحساء ؛ امتياز سلفي .- الاحساء ، ١٤٤٣هـ

١٠٢ ص ؛ ..سم

ردمك: ٠-٢-٩١٧١٧-٦٠٣-٩٧٨

١- الاسلام أ.سلفي ، امتياز (مترجم) ب.العنوان

ديوي ٢١٠ ١٤٤٣/٢٠٤٢

**رقم الإيداع: ١٤٤٣/٢٠٤٢**
**ردمك: ٠-٢-٩١٧١٧-٦٠٣-٩٧٨**

## உள்ளடக்கம்

## அணிந்துரை

நான் உலகைச்சுற்றி பயணித்தப் போது அதிகமான மொழிகளை கற்றுக் கொண்டேன். பல்வேறுப்பட்ட கலாசாரங்களையும் அறிந்து கொண்டேன்.

பல்வேறுப்படட சமூகங்களின் மார்க்கக் கொள்கைகள் கலாசாரங்கள் நாகரீகங்களை அவதானித்த போது நாம் கண்டு கொண்ட விடயம் என்னவென்றால் அவர்களது உயர்பண்புகள் மனித நேய கருத்துக்களுடன் தொடர்புபட்டிருந்தது.அது மட்டுமல்ல வரலாற்றுப் பின்னணியுடன் பார்க்கும் போது மார்க்க அடிப்படைகளுடனும் கொள்கையுடனும் தொடர்புள்ளவர்களாக காணப்பட்டனர். நாம் அனைவரும் முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்களிடமிருந்தே (ஒரு மார்க்கத்தையும் ஒரு கொள்கையையும்) கற்றுக் கொண்டோம். அவருக்கென்று ஒரு மார்க்கமும் கொள்கையும் இருந்தது. பல்வேறுப்பட்ட மதங்கள் கொள்கைகள் மனித சமுதாயத்தினரிடமிருந்து வந்தது.

மனிதர்களிடம் காணப்படும் மதக் கொள்கைகளையும் மத அடையாளங்களையும் உற்று நோக்கினால் அக்கொள்கைகள் அவர்களது சமுதாயத்தினரிடமிருந்து வாழையடி வாழையாக வந்துள்ளதை காணமுடியும். (அதே வேளை)

கஷ்டங்களின் போது உலகைப்படைத்தவனான அல்லாஹ்வை நம்பிக்கைக் கொண்டு அவனிடம் மீளக்கூடியவர்களாகவும் இருந்தனர். இந்த மதங்கள் நம்பிக்கைகள், சரியான ஒரு மார்க்கத்திலிருந்து ஊற்றெடுத்துள்ளது என்ற வரலாற்று அடிப்படையை உறுதிப்படுத்தும்.

தற்கால மக்களிடம் காணப்படும் மார்க்கப் பாரம்பரியம், ஏக இறைகொள்கையின் (தவ்ஹீதின்) அடிப்படையில் ஒரு இறைவனை நம்பிக்கைக் கொண்டு அவனை மாத்திரம் வணங்கி வழிப்படுதல் என்ற அடிப்படையை கொண்டதாகும். இந்த மார்க்கங்களினதும் வேதங்களினதும் ஆணிவேர் இஸ்லாமாகும் என்பதை பல ஆதாரங்கள் சுட்டிக் காட்டுகின்றன.

இப்போது எல்லோருக்கும் எழும் கேள்வி, இஸ்லாம் ஏன்? எதற்கு? என்பதாகும்.

இதற்கான பதில் மிக எளிமையானது. மனித இனத்தின் தந்தை ஆதம் (அலை) அவர்களின் மார்க்கம் இஸ்லாமாகும். மனித இனம் அவரிலிருந்து உருவானது. பல சமூகங்கள் அந்த மார்க்கததை விட்டு விலகிச் சென்றன. (உண்மை இவ்வாறு இருக்கையில்) மற்ற மதங்களை விட இஸ்லாம் மட்டும் பயங்கரவாத குற்றச்சாட்டுக்கு இழக்காகுவதும் பல சிதைவுகளுக்கு ஆளாகுவதும்

ஏன் என்பதை – பல கோணங்களில் ஆச்சரியமான முறையில் – இந் நூலில் உங்களுக்கு விளக்கப்படுத்தியுள்ளேன்.

இந் நூலின் நோக்கம் மனிதர்களுக்கு இஸ்லாத்தை அறிமுகப்படுத்துவதாகும். அனைத்து சமூகத்தினருக்கும் ஏக இறைகொள்கையை (தவ்ஹீதைத்) தான் அல்லாஹ் வழங்கினான். மனித சமூகத்திற்கு அல்லாஹ் அனுப்பிவைத்த தூதர்கள் இக்கொள்கையை நினைவூட்டுவதற்கும் பேணிபாதுகாப்பதற்கும் பாடுபட்டார்கள்.

இஸ்லாத்தின் நோக்கம், மனித புத்திகளையும் சிந்தனைகளையும் கொள்கைகளையும் சுத்தப்படுத்தி அல்லாஹ்வை நினைவூட்டி அவன் பால் மீண்டு அவனுடன் மக்கள் நேரடி தொடர்புகளை ஏற்படுத்துவதாகும். மேலும் பழக்கவழக்கங்கள் சடங்கு சம்பிரதாயங்களில் ஒன்றித்துப் போகக்கூடிய சிந்தனைகளை தகர்ந்தெறிந்து சுதந்திரங்களை வழங்கி உள்ளங்களை விடுதலை செய்து புதிய கண்டுப் பிடிப்புகளின் பால் மக்களை தூண்டுவதுமாகும் .

இந் நூல் இஸ்லாத்தின் தனித்துவத்தயும் சிறப்பம்சத்தையும் எடுத்துக் காட்டுகிறது. கால ஓட்டத்திற்கு ஏற்ப பல்வேறுப்பட்ட சமூகங்களின்

நாகரீகங்களையும் அபிவிருத்திகளையும் புரிந்து கொள்ளும் நெகிழ்வுத்தனமையை இஸ்லாம் கொண்டுள்ளது. இஸ்லாத்தை சிதைப்பதற்கான பல்வேறு முயறச்சிகள் மேற்கொள்ளப்பட்டு பயங்கரவாத மார்க்கமாக சித்தரிக்கின்ற எதிர்மறை பிரச்சாரத்திற்கு முனனால், மன உறுதியோடு நின்று அதனை எதிர்த்துப் போராட மக்களை தூண்டுகின்றது.

கவலையான விடயம் என்னவென்றால் அதிகமான மக்கள் இஸ்லாம் பற்றி தவறாகப் பேசுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு இஸ்லாம் எதன் பால் அழைக்கிறது அதன் அடிப்படைகள் என்ன சட்டங்கள் என்ன என்பது பற்றி எதுவும் தெரியாது. மேலும் குர்ஆன் உள்ளடக்கியுள்ள உபதேசங்களும் மனிதர்களுக்கு நன்மைகள் செய்வது பற்றிய விடயங்களும் தெரியாது.

மனிதர்களின் இந்த அறியாமை, இஸ்லாம் பற்றிய உண்மையை தெளிவுப்டுத்த வேண்டிய பாரிய பொறுப்பை எமது தோள்களில் சுமத்தியுள்ளது.இஸ்லாம் பற்றி அறியாத மக்களிடம், நீங்கள் இஸ்லாத்திற்கு எதிராக தீர்ப்புச் சொல்ல முன் இஸ்லாத்தை உற்றுநோக்குமாறும் குர்ஆனை சரிவர படிக்குமாறும் அதனுடைய அடிப்படைகளை அறிந்து கொள்ளுமாறும் நான் அழைப்பவிடுக்கிறேன்.

உண்மையை ஆய்வு செய்கின்றவர்களுக்கும் தெளிவான புத்தியுள்ளவர்களுக்கும் திறந்த மனம் உள்ளவர்களுக்கும் முன்னால் உள்ள பாதைக்கு ஒளிவீசும் விளக்காக இந்நூலை ஆக்கிடுமாறும், இஸ்லாத்தை அறிந்து கொள்ளும் அனைவருக்கும் சாமாதானத்தின் தூதாகவும் இந்நூலை ஆக்கிடுமாறு அல்லாஹ்வை பிரார்த்திக்கிறேன்.

ஆசிரியர்
அஷ்ஷெய்க் பாதின் சப்ரீய்

## 1.முன்னுரை

*இஸ்லாமிய தூது, இந்த பூமியில் மனித இனம் தோற்றம் பெற்ற– முதல் மனிதரான ஆதம் [1] (அலை) அவர்கள் – காலத்திலிருந்து இறுதித் தூதர் முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் வரை தொடர்ந்தது. இந்த தூது என்பது அகிலங்களின் இரட்சகனான அல்லாஹ்வுக்கு மட்டும் வழிபடுவது [2] அவனுடன் நேரடி தொடர்புகளை பேணுவது அவனிடம் அடிமைத்துவத்தை காண்பிப்பது. அவனை முன்னோக்குவது அவன் விதித்த விதியை (கழாகத்றை) ஏற்றுக் கொள்வது அவன் இறக்கிய வேதங்களையும் இறைத் தூதர்களையும் வானவர்களையும் மறுமை நாளையும் நம்புவதுமாகும்.*

எல்லா சமூகங்களுக்கும் ஒரு தூதுத்துவத்தையும் சுபிட்சத்திற்கான ஒரு வழியையும் காண்பிப்பதற்காக அல்லாஹ் இறைத்தூதர்களை அனுப்பிவைத்தான். அத்தூதுத்துவம் மிக எளிமையானதும் தெளிவானதுமாகும்.

அந்த தூதுத்துவம் இது தான்: வணங்கி வழிப்படுவதற்கு தகுதியான அல்லாஹ்வை நம்பிக்கைக் கொண்டு அவனுக்கு மட்டும் வழிபடுவது. அடியார்களின் செயல்கள் குறித்து விசாரணை செய்யும் மறுமை நாளை நம்புவது அவர்களின் செயல்களுக்கு ஏற்ப சுவனம் அல்லது

நரகம் அவர்களது ஒதுங்குமிடம் என்று நமபுவது, எல்லா மக்களும் வாழ்வதற்றான வழிமுறைகளையும் சட்டவிதிமுறைகளையும் கொண்டுள்ள வேதங்களுடன் இறைத்தூதர்களை அல்லாஹ் அனுப்பிவைத்தான் என்று நம்புவதுமாகும். மனிதர்கள் அவ்வேதத்தில் உள்ளபடி வாழ்வது கடமையாகும். அது குறித்து மறுமையில் விசாரிக்கப்படுவார்கள்.

இறைத்தூதர்கள் சமூகத்தின் மத்தியில் ஒளி வீசும் விளக்குகள் போன்றவர்கள். அவர்களை பின்தொடர்கின்றவர்களுக்கு அந்த விளக்கு வெளிச்சம் கொடுக்கின்றது சுபிட்சத்திற்கான வழியையும் தெளிவுப்படுத்துகிறது. அல்லாஹ் ஒருவனுக்கு வழிபட்டு நபிகளாரின் போதனைகளை பின்பற்றுவதன்மூலமே இந்த சுபிட்சத்தை பெற முடியும்.

காலப்போக்கில் மனிதர்கள் நேர்வழியிலிருந்து வழிதவறி மனோஇச்சைகளை பின்பற்றி அல்லாஹ் அல்லாதவர்களை கடவுள்காக வழிப்பட்டு அக்கடவுள்களை அல்லாஹ்வுக்கும் மனிதர்களுக்குமிடையில் தரகர்களாக்கி அவர்களையே கடவுள்களாகவும் எடுத்துக் கொண்டனர்.

_ _ _ _ _ _ _ _ _ _

(1) எல்லாம் வல்ல அல்லாஹ்வால் படைக்கப்பட்ட முதல் மனிதர் ஆதம்.

(2) கடவுள், படைப்பாளன், தனித்தவன், தன்னிகரற்றவன், தனக்கு துணை, அல்லது பிள்ளைகளை ஏற்படுத்திக் கொள்வது எந்த வகையிலும் தனது கண்ணியத்துக்கு தகுந்த ஒன்றாக அமைக்காதவன், மேலும் அவன் யாரையும் பெறவும் இல்லை, யார் மூலமாகவும் பிறக்கவும் இல்லை, அவனுக்கு நிகராக எவனும் எதுவும் இல்லை. அவனது மகிமையை இன்னும் ஒருவருடன் ஒப்பிட முடியாத, தனக்காக ஒரு துணையை, அல்லது பிள்ளைகளை ஏற்படுத்தாதவன், தனக்கு நிகரான ஒருவனோ அல்லது பகைவனோ இல்லாத முழுமை நிரம்பிய கடவுளாவான். இடங்களில் மற்றும் காலங்களில் வசிக்கும் மனிதர்களாகிய எமக்கு காரணிகள் விதியாக்கப் பட்டிருப்பினும், அல்லாஹ்வாகிய அவனே காலங்களை மற்றும் நேரங்களை படைத்தவனாவான். மேலும் அவ்விரண்டுடனும் தொடர்பு படக்கூடிய அனைத்திலும் அவன் மேலானவன். அவைகள் இரண்டில் ஏதாவது ஒன்றால் அவன் சூழப் பட்டுள்ளான் என்று நினைப்பது நாம் செய்யும் தவறாகும். அல்லாஹ்வாகிய அவனே காரணிகள் எனும் விதியை ஏற்படுத்தினான். அவனால் படைக்கப் பட்ட காரணிகளுக்கு அவனே கட்டுப் படுத்தல் என்பது சாத்தியப் படாத ஒன்றாகும். அதனாலேயே அல்லாஹ் என்றும் மாறாதவனாக இருந்துகொண்டு இருக்கின்றான். அவன் நேரத்தை படைத்தான், அதனடிப்படையில் நேரத்தால் அவன் கட்டுப் படுத்தப்பட மாட்டான். மனிதர்களாகிய எம்மூடாக காலம் கடந்து செல்வதைப் போன்று, அவனூடாக காலம் கடந்து செல்லாது. மேலும் அவன் களைப்படயவும் மாட்டான். ஒரு குறிப்பிட்ட வடிவில் அமையப் பெற வேண்டும் என்றோ, அல்லது பூமியை நோக்கி இறங்க வேண்டும் என்றோ அவனுக்கு தேவை கிடையாது. எனவே அவை இரண்டின் விதிகளில் இருந்தும் அவன் வெளியே இருப்பதனாலும், நாம் காலத்தால், இடத்தால் கட்டப் பட்டு இருப்பதனாலும், எமது வெற்றுக் கண்ணால் அவனைக் காண முடியாமல் தடுக்கப் பட்டு இருக்கின்றோம். உதாரணமாக: ஜன்னல்கள் இல்லாத ஒரு அறையில் உள்ள மனிதனால், அறையின் உள்ளே இருப்பவைகளை மாத்திரமே காண முடிகிறது. வெளியே இருப்பவைகளை காண வேண்டும் எனில் அவன் அறையில் இருந்து வெளியே செல்ல வேண்டும்.

தங்கள் இரட்சகனாகிய அல்லாஹ்வை அம்மக்கள் வணங்குவதற்கும் அவனை நினைவூட்டுவதற்கும் அவர்களுக்கு மத்தியிலிருந்து பேணுதலும் இறையச்சமும் உள்ளவர்களை இறைதூதர்களாகவும் நடுநிலையாளராகவும் அல்லாஹ் தெரிவுசெய்தான்.

இறுதிநபியாக அனுப்பபபட்ட முஹம்மத் நபியின் சமூகம மாத்திரமே இஸ்லாத்தையும் ஓரிறைக் கொள்கையையும் எந்த மாற்றங்களுமின்றி பாதுகாத்தது. இதனால் அல்லாஹ்வின் வேதமாகிய இக்குர்ஆன் நபிகளாருக்கு இறக்கப்பட்டதன் பிரகாரம் எவ்வித மாற்றமுமின்றி திரிபுமின்றி நிலைத்திருக்கிறது.

தர்க்கரீதியாக நோக்கினால் இறுதித் தூதாக இருப்பதற்கு இந்த குர்ஆன் பொருத்தமானதும் சரியானதுமாகும். திரிபுபடுத்தப்படட முந்தைய வேதங்களை விட இந்த வேதத்தையே அல்லாஹ் பொருந்திக் கொண்டான்.

அல்லாஹ் கூறுகிறான்:

இன்றைய தினம் உங்களது மார்க்கத்தை உங்களுக்கு நான் முழுமைப்படுத்தி விட்டேன். எனது அருட்கொடைகளையும் உங்கள் மீது பூரணப்படுத்தி விட்டேன். மேலும் நான்

இஸ்லாதையே உங்களுக்கு மார்க்கமாக பொருந்திக் கொண்டேன். **(5:3**)

**இஸ்லாமிய போதனைகளிலிருந்து சிலவரிகள்:**

- தொழுகையினூடாக எப்போதும் அல்லாஹ்வுடன் தொடர்ப்பைப் பேணுதல்.

- நோன்பின் மூலம் அடுத்தவர்களுடன் பிணைப்பையும் இரக்க உணர்வுகளையும் வளர்த்து மனித ஆளுமையையும் மனக்கட்டுப்பாட்டையும் வலுப்படுத்துல்.

- தனது சேமிப்பிலிருந்து குறிப்பிட்ட தொகையை ஸகாத் கொடுப்பதினூடாக ஏழை எளியவர்களுக்கு செலவுசெய்தல்.

  இது கஞ்சதனத்திலிருந்து விடுபட்டு மனிதனுக்கு வாரிவழங்கி உபகாரம் செய்ய துணைபுரிகின்ற ஒரு வணக்கமாகும்.

- ஹஜ்ஜு வணக்கம் மூலம் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட இடத்தில் 3 ஒன்றுசேர்ந்து ஒரே உணர்வுடன் மு:மின்கள் அனைவரும் படைத்தவனாகிய அல்லாஹ்விடம் முன்னோக்கி நிற்றல்.

மனிதர்கள் தங்களது மொழி நிறம் அந்தஸ்து மற்றும் கலாசாரம் மனித பரிணாமவளர்ச்சிகள் ஆகியவற்றில் வேறுபட்டிருந்தாலும் அல்லாஹ்வின் பால் முன்னோக்கி நிற்பது ஐக்கியத்தின் அடையாளமாகும்.

மனித சமூகத்திற்கு அல்லாஹ் அனுப்பிவைத்த எல்லா இறைத்தூதர்களையும் எவ்வித பாகுபாடின்றி ஏற்றுக் கொள்வதுதான் இஸ்லாமாகும். எந்தவொரு தூதரையாவது நிராகரிப்பது இஸ்லாமிய கோட்பாட்டுக்கு முரணானதாகும். இதன்மூலம் அல்லாஹ் அருளிய மார்க்கங்களை நம்பிக்கைக் கொண்டிருக்கின்ற ஏனையவர்களுடன் பலமான உறவு கட்டியெழுப்பப்படுகின்றது

‘‘இத்தூதர் தனது இரட்சகனிடமிருந்து தனக்கு இறக்கப்பட்டதை நம்பிக்கைக் கொண்டுள்ளார். மு.ஃமின்களும் (நம்பிக்கைக் கொண்டுள்ளனர்) அவர்கள் அனைவரும் அல்லாஹ்வையும் அவனது வானவர்களையும் அவனது வேதங்களையும் அவனது தூதர்களையும் நம்பிக்கைக் கொண்டுள்ளனர். அவனது தூதர்களில் எவருக்குமிடையில் வேறுபாடு காட்டமாட்டோம் நாம் செவியேற்றோம் கட்டுப்பட்டோம் எங்கள்

இரட்சகனே! உனது மன்னிப்பை கோருகிறோம் உன்னிடமே மீளுதல் உள்ளது என்றும் கூறுகின்றனர் (2:285)

_ _ _ _ _ _ _ _ _ _

(3) மக்கா மற்றும் மதீனா ஆகிய இரண்டு நகரங்கள் சவுதி அரேபியாவில் அமைந்துள்ளன. புனித "கஅபா" மக்காவில் அமைந்துள்ளது. ஒரே இறைவனை வழிபடுவதற்காக உலகில் முதன்முதலாக அமைக்கப்பட்ட வழிபாட்டுத்தலம் இது என்று முஸ்லிம்கள் நம்புகின்றனர்.

பல்வேறு சமூகங்களுக்கும் அனுப்பட்ட பல இறைத்தூதர்களின் பெயர்களை அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகிறான். உதாரணமாக நூஹ் இப்றாஹீம் இஸ்மாயில் இஸ்ஹாக் ய∴கூப் யூசுப் மூஸா தாவுத் சுலைமான் ஈஸா போன்றவர்கள். பெயர் குறிப்பிடப்படாத மேலும் சில நபிமார்களும் இருக்கிறார்கள். பௌத்த இநது மதங்களிலும் (ராமர் கிருஷ்னா புத்தர் போன்றவர்கள்) இறைத்தூதர்களாக இருப்பதற்கு சாதிதியப்பாடுகள் உண்டு எனசிலர் சுட்டிக் காட்டுகின்றனர். **இது தவிர்க்கமுடியாத சிந்தனையாகும்.** அரபுமக்ககளுக்கு முஹம்மத் நபியை தூதராக அல்லாஹ் அனுப்பி வைத்தது போல் தற்காலத்திலுள்ள சமூகத்திற்கு எத்தூதரையும் அனுப்பவில்லையே என சிலர் கோஷம் எழுப்புகின்றனர் (முஹம்மத் நபி இறுதி தூதராக அனுப்பப்பட்டதன் மூலம் இறைத்தூதர்களின் வருகை முற்றுப் பெற்றுள்ளது என்பதை அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை)

(நபியே) உமக்கு முன்னர் நாம் பல தூதர்களை அனுப்பியிருக்கின்றோம். அவர்களில் சிலர் பற்றி உமக்கு நாம் கூறியுள்ளோம். இன்னும் அவர்களில் சிலர் பற்றி நாம் உமக்கு கூறவில்லை அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்தத் தூதரும் எந்த ஓர் அத்தாட்சியையும் கொண்டு வரமுடியாது அல்லாஹ்வின் கட்டளை வந்து விட்டால் நீதியைக்

கொண்டு தீர்ப்பளிக்கப்படும். அங்கே வீணர்கள் நஷ்டமடைவார்கள். (40:78)

இஸ்லாம் மனித கௌரவத்தையும் உயர்மதிப்பையும் பேணுகின்றது. உரிமைகளிலும் கடமைகளிலும் மனிதர்கள் சமமானவர்கள் என்றும் எங்களுக்கு கற்றுத்தருகின்றது அனைவருக்கும் பாதுகாப்பை வழங்குவ தனுாடக சமாதானத்தின் பாலும் நீதியின் பாலும் அழைப்புவிடுகின்றது.

சமூக ஐக்கியம் அயலவர்களுடனான நற்புறவு சொத்துச் செல்வங்களின் பாதுகாப்பு உடன்படிக்கைகளை நிறைவேற்றுதல் மற்றும் ஏனைய உயர் கோட்பாடுகளையும் (பாதுகாக்க) பொறுப்பேற்கின்றது

அல்லாஹ்வினால் அருளப்பட்ட மார்க்கங்களின் அடிப்படை ஒன்றுதான் என்பதை இது உறுதிசெய்கின்றது மேலும் ஏனையவர்களின் கண்ணியத்தை உறுதிப்படுத்தி அவர்களுக்கு ஞானத்தைக் கொண்டும் அழகிய உபதேசத்தைக் கொண்டும் அழைப்பு விடுக்கின்றது இஸ்லாம்.

‘‘(நபியே) ஞானத்தைக் கொண்டும் அழகிய உபதேசத்தைக் கொண்டும் உமது இரட்சகனின் பாதையின் பால் அழைப்பீராக. இன்னும் மிகச் சிறந்த முறையில் அவர்களுடன் தர்க்கம் புரிவீராக. எவர் தனது பாதையை விட்டும் விலகி விட்டாரோ

அவரை உமது இரட்சகன் மிகவும் அறிந்தவன் நேர்வழிபெறுவோரை அவனே மிக அறிந்தவன் (16:125)

முரட்டுத்தனம் கடும்போக்கு வன்முறை ஆகியவற்றை நாடுவதும் அதன்பால் வழிகாட்டுவதையும் கடுமையான வார்த்தை பிரயோகங்களை பயன்படுத்து தையும் இஸ்லாம் கண்டிக்கிறது

''நபியே! அல்லாஹ்வின் அருளின் காரணமாகவே நீர் அவர்களுடன் மென்மையாக நடந்து கொள்கிறீர். நீர் கடுகடுப்பானவராகவும் கடின உள்ளம் கொண்டவராகவும் இருந்திருப்பின் அவர்கள் உம்மை விட்டும் விலகிச் சென்றிருப்பார்கள். எனவே அவர்களை நீர் மன்னித்து அவர்களுக்காக பாவமன்னிப்புத் தேடி காரியங்களில் அவர்களுடன் ஆலோசனையும் செய்வீராக. நீர் உறுதியான முடிவுக்கு வந்து விட்டால் அல்லாஹ்வின் மீது முழுமையான நம்பிக்கை வைப்பீராக நிச்சயமாக அல்லாஹ் (தன்மீது) முழுமையான நம்பிக்கை வைப்போரை நேசிக்கின்றான் (3:159)

''நபியே அகிலத்தாருக்கு **4** அருட்கொடையாகவேயன்றி உம்மை நாம் அனுப்ப வில்லை.(21:107)

உடன்படிக்கைகளையும் உறுதிமொழிகளையும் கண்ணியப்படுத்துவதை கடமையாக்கி மோசடிகளை தவிர்ந்து கொள்ளுமாறு இஸ்லாம் மக்களுக்கு கடுமையாக எச்சரிக்கின்றது. அடுத்தவர்களுடன் பழகும் போது –அவர்கள் எதிரிகளாக இருந்தாலும்– திறந்தமனதுடனும் வெளிப்படைத்தன்மையுடனும் நடந்து கொள்ளுமாறு கட்டாய மாக்கியுள்ளது.

‘‘(உம்முடன் உடன்படிக்கை செய்த) எந்தக் கூட்டத்தினரிடமாவது மோசடியை நீர் அஞ்சினால் நீரும் சமமாக (அதை முறித்து) அவர்களிடம் வீசிவிடும். நிச்சமாக மோசடி செய்வோரை நேசிக்க மாட்டான்.(8:58)

‘‘ஈமான் கொண்டவர்களே! உடன்படிக்கைகளை முழுமையாக நிறைவேற்றுங்கள் (பின்னர்) உங்களுக்கு ஓதிகாட்டப்படுபவற்றையும் நீங்கள இஹ்ராம் அணிந்த நிலையில் வேட்டையாடுபவற்றையும் தவிர கால்நடைகள் உங்களுக்கு (உண்ண) அனுமதிக்கப் பட்டுள்ளன. நிச்சயமாக அல்லாஹ் விரும்புவதை சட்டமாகுகின்றான். (5:1)

‘‘மேலும் நீங்கள் உடன்படிக்கை செய்தால் அல்லாஹ்வின் உடன்படிக்கையை முழுமையாக நிறைவேற்றுங்கள். சத்தியங்களை உறுதிபடுத்திய

பின் நீங்கள் அவற்றை முறிக்க வேண்டாம். நிச்சயமாக நீங்கள் அல்லாஹ்வையே உங்கள் சத்தியங்களுக்குப் பொறுப்பாளனாக ஏற்படுத்தியிருக்கின்றீர்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிவான். (16:91)

வாழ்வை உயர்வானதாக இஸ்லாம் மதிக்கின்றது சிவிலியன்களுடனும் சமாதான ஒப்பந்தம் செய்தவர்களுடனும் போரிடுவதை தடுக்கின்றது. போரில் பெண்கள் சிறுவர்கள் மற்றும் சொத்துக்களை பாதுகாக்குமாறு கட்டளையிடுகிறது கொல்லப்பட்டவர்களின் சடலங்களை சிதைப்பதையோ சல்லடைபோடுவதையோ ஆகுமாக்கவில்லை. இவை இஸ்லாமிய பண்பாடுகளுக்கு அப்பால்பட்டவையாகும்.

‘‘எவர்கள் உங்களுடன் போரிடுகின்றார்களோ அவர்களுடன் நீங்களும் அல்லாஹ்வின் பாதையில் போரிடுங்கள்.(2:190)

‘‘எவர்கள் மார்க்க விடயத்தில் உங்களுடன் போரிட வில்லையோ அவர் களுக்கும் மேலும் உங்களை உங்களது இல்லங்களை விட்டும் வெளியேற்ற வில்லையோ அவர்களுக்கும் நீங்கள் நன்மை செய்வதையும் அவர்களுடன் நீங்கள் நீதியாக நடப்பதையும் அல்லாஹ் உங்களுக்கு

தடுக்கவில்லை. நிச்சயமாக அல்லாஹ் நீதியாக நடப்பவர்களை நேசிக்கின்றான்.

_ _ _ _ _ _ _ _ _ _

(04) அல்லாஹ் திருக்குர்ஆனில் தன்னைக் குறிப்பிடும் வசனங்களில் நாம், நாம், என்ற பன்மை பெயர்ச்சொற்களை பயன்படுத்தியுள்ளான். அல்லாஹ்வே எல்லா வகையிலும் பரிபூரணமானவனாகவும், எல்லா நற்பண்புகளிலும் பரிபூரணமானவனாகவும், மகத்துவத்தின் மிக உயர்ந்த நிலையை உடையவனாகவும் இருக்கிறான் என்பதே இதன் பொருள். ஆங்கிலத்திலும், அரசர்கள், ஆட்சியாளர்கள் மற்றும் உயர் பதவியில் இருப்பவர்கள் தங்கள் கட்டளைகளைக் குறிக்கும் சிறப்பு எழுத்துக்களில் தங்களை (பன்மைப் பெயருடன்) குறிப்பிடும்போது "நாங்கள்" என்ற வார்த்தையைப் பயன்படுத்துகிறார்கள். இருப்பினும், "அல்லாஹ்" தனது ஒருமைப்பாட்டைக் குறிக்கும் அனைத்து புனித வசனங்களின் பெயர்களையும் ஒருமையில் பயன்படுத்துகிறான்.

எவர்கள் மார்க்க விடயத்தில் உங்களுடன் போரிட்டு உங்களது இல்லங்களை விட்டும் வெளியேற்றினார்களோ அவர்களையும் மேலும் உங்களை வெளியேற்றிட உதவி செய்தார்களோ அவர்களையும் நேசத்திற்குரியவர்களாக எடுத்துக் கொள்வதையே அல்லாஹ் உங்களுக்கு தடுக்கின்றான். அவர்களை யார் நேசர்களாக எடுத்துக்கொள்கின்றார்களோ அவர்கள் தாம் அநியாயக் காரர்கள் (60:8 – 9)

‘‘இதன்காரணமாகவே நிச்சயமாக எவன் கொலைக்கு பகரமாகவோ அல்லது பூமியில் குழப்பம் விளைவித்ததற்காகவோ அன்றி மற்றொரு ஆன்மாவை கொலை செய்கின்றானோ அவன் மனிதர்கள் அனைவரையும் கொலை செய்தவன் போன்றவனாவான் என்றும் எவன் ஒருவன் அதை வாழவைக்கின்றானோ அவன் மனிதர்கள் அனைவரையும் வாழவைத்தவன் போலாவான் என்றும் இஸ்ராயீலின் சந்ததிகள் மீது நாம் விதித்தோம். நிச்சயமாக அவர்களிடம் நமது தூதர்கள் தெளிவான சான்றுகளை கொண்டு வந்தனர். பின்னர் நிச்சயமாக அவர்களில் அதிகமானோர் இதன் பின்பு பூமியில் வரம்பு மீறுவோர்களாகவே உள்ளனர்.(5:32)

மனித நடவடிக்கைகளின் அனைத்துப் பகுதிகளையும் இஸ்லாம் கட்டுப்படுத்து கின்றது.

வரலாறு நெடுகிலும் பலமான சமூகங்களையும் மகத்தான நாகரிகங்களையும் கட்டியெழுப்பியது அறிவியல் ஆய்வுக்கான அடிப்படைகளை நிறுவி சிந்தனை சுதந்திரத்தை வழங்கி சகிப்புத்தன்மைக்கும நீதிக்கும் அத்திவாரமிட்டது. மனித அடிப்படைகோட்பாடுகளுக்கு மதிப்பு கொடுத்தது. சாதனைகள் படைக்க பங்காற்றிடுமாறு முஸ்லிமல்லாதவர்களையும் உற்சாகமூட்டுகிறது. இவை அனைத்தும் பல்வேறுப்பட்ட இனங்களும் கோத்திரங்களும் மகத்தான நாகரிகத்தை கட்டியெழுப்புவதற்கு பங்களிப்புச் செய்தது . [5]

நவீன கொள்கைகளுக்கும் பயங்கரவாதத்ததிற்கும் துணைபோவதை இஸ்லாம் கண்டிக்கிறது. சிவிலியங்களையும் சமாதான ஒப்பந்தம் செய்தவர்களையும் பயமறுத்து வதற்கும் அடுத்தவர்கள் மீது அத்துமீறுவதற்கும் இச்செயல் காரணமாக அமைகின்றது. அவ்வாறே காயப்பட்டவர்கள் சிறைபட்டவர்கள் பெண்கள் குழந்தைகள் ஆகியோரை கொலை செய்வதையும் சொத்துக்களை சேதப்படுத்துவதையும் கண்டிக்கிறது. தங்கள் நோக்கங்களை அடைந்து கொள்ளுவதற்காக பண்பாடற்ற வழிமுறைகளை கையாள்வதையும் கண்டிக்கிறது. (தவறான செயற்பாடுகளை நியாயப்படுத்துவது இஸ்லாத்தின் கொள்கையல்ல.)

‘‘உங்கள் இரட்சகன் உங்கள் மீது தடுத்தவற்றை உங்களுக்கு நான் ஓதிக்காட்டுகின்றேன் வாருங்கள் என நபியே நீர் கூறுவீராக. நீங்கள் அவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள். பெற்றோருடன் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள், வறுமைக்காக (பயந்து) உங்கள் குழந்தைகளை கொலை செய்யாதீர்கள். (ஏனெனில்) நாமே உங்களுக்கும் அவர்களுக்கும் உணவளிக்கின்றோம். இன்னும் மானக்கேடான செயல்களில் பகிரங்கமானவற்றையும் மறைவானவற்றையும் நெருங்காதீர்கள். அல்லாஹ் தடைசெய்த எந்த ஆன்மாவையும் உரிமையின்றி கொலை செய்யாதீர்கள். நீங்கள் விளங்கிக் கொள்ளும் பொருட்டு இவற்றை அல்லாஹ் உங்களுக்கு ஏவுகின்றான்.(6:151)

பண்பாடுகளுக்கான பலமான கட்டமைப்பை இஸ்லாம் நிறுவியிருக்கிறது. சுயநலம் கஞ்சத்தனம் குரோதம் ஆகியவற்றிலிருந்தும் அநீதி துன்புறுத்தல் சட்டத்திற்கு கட்டுப்படாமை ஆகிய பண்புகளின் பால் இட்டுச் செல்லும் வழிகளிலிருந்தும் ஆன்மாவை பரிசுத்தப்படுத்திட நேர்த்தியான வழிமுறையையும் கொண்டுள்ளது.

எல்லா நிலமைகளிலும் எல்லா படைப்புகளிடமும் அமைதி கருணை கண்ணியம் மற்றும் அனபு காட்டுமாறும் சகிப்புத்தன்மையும் பொறுமையையும்

அணிகலன்களாக கொள்ளுமாறும் அழைப்பு விடுக்கின்றது.

அல்லாஹ்வைப் பற்றிய அறிவும் உணர்வும் உள்ள மனிதனையே இஸ்லாம் உருவாக்கின்றது. அவன் இறையச்சத்தை சொந்தமாக்கிக் கொள்ளும் நோக்கிலும் தவறான விடயங்களில் எவ்வித ஈடுபாடுமற்றவானகவும் செயல்படுவான்.

பூமியில் அல்லாஹ்வின் பிரதிநிதியாகவும் உதாரணப்புருஷராக திகழ்வதற்கும் மக்களுக்கு பயனளிப்பவனாக இருப்பதற்குமே அல்லாஹ் மனிதனை படைத்தான்.

_ _ _ _ _ _ _ _ _ _

(5) இஸ்லாமிய கலாச்சாரம், சிந்தனை, மற்றும் சிந்தனை சுதந்திரத்தை நிறுவுவதன் மூலம் வெற்றியை அடைந்துள்ளது. வெவ்வேறு இனங்கள் மற்றும் தேசிய இனங்களின் உலக கலாச்சாரத்தை உருவாக்க இஸ்லாம் பங்களித்தது மட்டுமல்லாமல், ஒரு பொறுப்பான நிலையில் அமர்ந்து (உலகின் மிகவும் மதிப்புமிக்க கலாச்சாரத்தை உருவாக்குவதன் மூலம்) அறிவுசார் மற்றும் கலாச்சார வாழ்க்கையின் வளர்ச்சியில் இஸ்லாம் குறிப்பிடத்தக்க பங்கைக் கொண்டிருந்தது. இது போன்ற ஒரு முயற்சி இதற்கு முன் எடுக்கப்படாத அளவுக்கு பெரிய அளவில் நடந்தது. எண்ணூறு ஆண்டுகளுக்கும் மேலாக, அரபு மொழி சிந்தனை மற்றும் அறிவின் சர்வதேச மொழியாக இருந்து வருகிறது.

## 2. மீடியாக்கள் மூலம் எதிர்மறையான முயற்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டபோதும் இஸ்லாம் வளர்வது ஏன்?

அல்குர்ஆன் இறங்கிய காலம் முதல் எதிரிகளின் கடுமையான தாக்குதல்களுக்கு முஹம்மத் நபி (ஸல்) அவர்களும் அவர்களுடைய தோழர்களும் முகம் கொடுத்தார்கள். இந்த தாக்குதல்கள் நீண்டகாலம் தொடர்ந்தன. இஸ்லாத்தின் தோற்றத்தை சிதைக்கக்கூடிய பாரிய முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. இத்தனைக்குமிடையில் இஸ்லாம் வளர்ந்தது. வளர்ச்சியடைந்தது. பகைவர்கள் வியப்படையும் அளவுக்கு எதிர்த்தவர்களில் அதிகமானோர் இஸ்லத்தில் இணைந்தும் கொண்டனர்

இதனை சகிக்க முடியாமல் குர்ஆன் சூனியம் என்றும் இறைத்தூதர் சூனியக்காரர் என்றும் கதைக்கட்டினார்கள். அவர்களுடைய கர்வம் சத்தியத்தைவிட்டும் அவர்களுடைய உள்ளத்தை ஊமையாக்கி பார்வையில் திரையிட்டுள்ளது என்பதை அவர்கள் புரிந்து கொள்ளவுமில்லை. இஸ்லாத்தின் பால் மக்கள் ஈர்க்கப்பட்டதற்கான பிரதான காரணியை அவர்கள் அறிந்து கொள்ளவுமில்லை.

சத்தியம் நீதி நேர்மை ஆகியவற்றின் பால் இஸ்லாம் அழைப்பு விடுக்கின்றது. அறிவுபூர்வமான தர்க்கரீதியான வழிகளை கையாள்கிறது மௌடீக சிந்தனைகள் பழக்க வழக்கங்கள் பரம்பரை சித்தாந்தங்களில் சிறைப்பட்டவர்களின் சுதந்திரத்திற்காக குரல் கொடுக்கின்றது.

பல நிறங்கள் இனங்களைக் கொண்ட மக்களின் உரிமைகளை பாதுகாத்து பெண்களை அடிமைத்துவத்திலிருந்து விடுவித்து அவர்களின் சுதந்திரத்தையும் கண்ணியத்தையும் பொறுப்பேற்றது இதுவே மக்கள் இஸ்லாத்தின் மீது ஈரப்புக் கொள்ள காரணமாகும். இது தொடர்ப்பாக உலகில் அறிவார்ந்தவர்கள் குறிப்பிட்ட சில தனித்துவ விடயங்களை இறுதி அத்தியாயத்தில் நோக்குவோம்.

மேலும் சில விடயங்களை பின்வருமாறு பட்டியலிடலாம்.

## 1.ஏக இறைக் கொள்கையினைப் பேணுதல்:

இஸ்லாத்தின் இறைகோட்பாடு – ஏனைய கோட்பாடுகள் மற்றும் தத்துவங்களை விட்டும் விலகி – இயற்கையான எளிமையான அடிப்படையில் நிறுவப்பட்டுள்ளது. இக்கொள்கையை சிறியவர் பெரியவர் படித்தவன் படிக்காதவன் புரிந்து கொள்ள முடியும்.

இறைக்கோட்பாடு என்பது: பிரப்பஞ்சத்தை படைத்து பரிபாளிப்பவனும் ஆட்சியாளனும் அகில உலகங்களின் இரட்சகனுமான அல்லாஹ் ஒருவனே வணங்கப்படத்தகுதியான கடவுள் என்பதாகும். அவனைப்போல் ஒருவனுமில்லை (அவனுடைய படைப்புக்களில் அவனுக்கு ஒப்பானவன் யாருமில்லை) அவனுக்கு இணையானவர்களோ பிள்ளைகளோ மனைவியர்களோ கிடையாது

வணக்கவழிபாடுகள் அவனுக்குரியது என்று உளத்தூய்மையோடு மேற்கொள்வதும் எந்த இடைத்தர்கரும் இன்றி நேரடியாக அவனை முன்னோக்குவதும் அவன் விதித்த விதியை (கழாகத்ரை) ஏற்றுக் கொள்வதும் அவசியமாகும்

அல்லாஹ் கூறுகின்றான்: அல்லாஹ் ஒருவன் என நபியே நீர் கூறுவீராக. அல்லாஹ் எவ்வித தேவையுமற்றவன் அவன் (எவரையும்)

பெறவுமில்லை (எவருக்கும்) பிறக்கவுமில்லை மேலும் அவனுக்கு நிகராக எவரும் இல்லை. (112:1 – 4)

உண்மையாக வணங்கப்படத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை அவன் என்றும் உயிருடன் இருப்பவன் நிலைத்திருப்பவன் சிறு தூக்கமோ பெரும் தூக்கமோ அவனை ஆட்கொள்ளாது வானங்களில் உள்ளவையும் பூமியில் உள்ளவையும் அவனுக்கே உரியன. அவனது அனுமதியின்றி அவனிடம் யார் தான் பரிந்துரைக்க முடியும்? (படைப்பினங்களான) அவர்களுக்கு முன் உள்ளவற்றையும் அவர்களுக்குப் பின் உள்ளவற்றையும் அவன் நன்கறிவான் அவன் நாடியவற்றைத் தவிர அவன் அறிந்திருப்பவற்றில் எதையும் அவர்களால் அறிய முடியாது அவனது ''குர்ஸி'' (சிம்மாசனம்) வானங்களையும் பூமியையும் வியாபித்திருக்கின்றது அவையிரண்டையும் பாதுகாப்பது அவனுக்கு சிரமமன்று அவன் மிக உயர்ந்தவன். மிகத் தூய்மையானவன். (2:255)

## 2.கூட்டல் குறைவின்றி அல்குர்ஆன் பாதுகாப்புப் பெறல்:

ஜிப்ரீல் (அலை) அவர்கள் மூலம் நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட அல்குர்ஆன் எந்த மாற்றமுமின்றி திரிபுமின்றி இன்றுவரை அப்படியே பாதுகாப்பாக உள்ளது. அல்லாஹ் குர்ஆனை பாதுகாப்பதாக வாக்களித்தது போல் அப்படியே (இன்றுவரை) பாதுகாப்பாக இருக்கிறது. இதில் ஒளிவு மறைவு இல்லை. முஸ்லிம்களின் கரங்களில் அல்குர்ஆன் தவழ்ந்து கொண்டிருக்கிறது. எவராவது குர்ஆன் பிரதியை பெற்று ஆராய்ந்து பார்க்க விரும்பினால் பார்த்துக் கொள்ளட்டும்.

‘‘நிச்சயமாக நாமே இவ்வேதத்தை இறக்கினோம் இன்னும நிச்சயமாக நாமே அதனை பாதுகாப்பவர்களாக உள்ளோம்.(15:9)

## 3.இஸ்லாம், முந்தைய வேதங்களையும் ஆகமங்களையும் ஏற்றுக் கொண்டு இறைத்தூதர்களை கண்ணியப்படுத்துதல்

முந்தைய வேதங்களையும் ஆகமங்களையும் உண்மைப்படுத்துவது இஸ்லாமிய சிறப்பம்சமாகும். முந்தைய வேதங்களையும் இறைத்தூதர்களையும் நம்பிக்கை கொள்வது இஸ்லாமிய கொள்கையின் அடிப்படைகளில் ஒன்றாகும். எல்லா

இறைத்தூதர்களையும் கண்ணியப்படுத்தி அவர்கள் மீது சுமத்தப்பட்ட கலகங்களிலிருந்து விடுவிக்கின்றது. அவர்கள் மனத்தூய்மையோடு இருந்தமைக்கும் அவர்கள் கொண்டு வந்த தூதுத்துவம் ஒன்று என்பதற்கும் இஸ்லாம் ஆதாரமாக இருக்கிறது

''அல்லாஹ்வையும் எங்களுக்கு இறக்கப்பட்டதையும் இப்றாகீம் இஸ்மாயீல் இஸ்ஹாக் யஃகூப் ஆகியவற்களுக்கும் (இவரது) சந்ததிகளுக்கும் இறக்கப்படடவற்றையும் மூஸாவுக்கும் ஈஸாவுக்கும் (மற்றும ஏனைய) நபிமார்களுக்கும் அவர்களது இரட்சகனிடமிருந்து வழங்கப்படடவற்றையும் நம்பிக்கை கொண்டோம். அவர்களில் எவருக்குமிடையிலும் நாம் வேற்றுமை பாராட்டமாட்டோம். நாங்கள் அவனுக்கே முற்றிலும் கட்டுப்பட்டவர்கள் என்று நிங்களும் கூறுங்கள். (2:136)

## 4 இஸ்லாம், கொள்கை சுதந்திரத்தை பாதுகாத்து ஏனைய மதத்தவர்களை கலந்துரையாடலுக்கு வருமாறு அழைப்புவிடுத்தல்

வேதத்தையுடையவர்களான யூத கிறிஸ்வர்களுடன் விவாதங்கள் கலந்துரையாடல்களுக்கான வாயிலை இஸ்லாம் திறந்து வைத்துள்ளது. இது பற்றி குர்ஆன் பல இடங்களில்

தெளிவுப்படுத்துகின்றது. சிந்தனை சுதந்திரத்திலும் சகிப்புத்தன்மையிலும் வேதத்தையுடையவர்களுடன் அழகிய முறையில் விவாதிப்பதிலும் இஸ்லாம் கட்டமைக்கப்பட்டுள்ளது. அல்குர்ஆன் இறுதி வேதமாக அருளப்பட்டு முஹம்மத் நபி இறுதி நபியாக அனுப்பப்பட்டார்கள். எனவே இறுதி மார்க்கமான இஸ்லாம் கலந்துரையாடுவதற்கான வழியை திறந்து வைத்துள்ளது. இஸ்லாமிய நிழலின் கீழ் கொள்கை சுதந்திரம் பாதுகாக்கப்படுகின்றது. (மார்க்கத்தில் நிர்ப்பந்தம் இல்லை என குர்ஆன் குறிப்பிடுகின்றது) இயற்கையான நேரான இஸ்லாமிய கொள்கையை எவர் மீதும் திணிக்கமுடியாது. முஸ்லிமல்லாத சகோதரர்களை கண்ணியப்படுத்தி அவர்களுடனான உடன்படிக்கைளை பேணுகின்றது. என்றாலும் மோசடிக்காரர்களுடனும் உடன்படிக்கைளையும் உறுதி மொழிகளையும் முறிக்கின்றவர்களுடனும் கடும் போக்கை கையாள்கிறது. இத்தகைய மோசடிக்காரர் களுடன் முஸ்லிம்கள் நேசம் கொள்வதை தடுக்கின்றது.

‘‘(நபியே!) அல்லாஹ் உமக்குக்கு காட்டித்தந்தவாறு மனிதர்களுக்கு மத்தியில் நீர் தீர்ப்பளிப்பதற்காக இவ்வேதத்தை நிச்சயமாக நாம் உமக்கு உண்மையைக் கொண்டு இறக்கி வைத்துள்ளோம். மோசடிக்காரர்களுக்காக வாதிடுபவராக நீர் ஆகிவிட வேண்டாம். இன்னும்,

அல்லாஹ்விடம் நீர் பாவமன்னிப்புத் தேடுவீராக! நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பவனாகவும் அன்புடையவனாகவும் இருக்கின்றான்.

(பிறருக்குத் தீங்கு செய்ததன் மூலம்) தமக்குத்தாமே மோசடி செய்து கொண்டோருக்காக நீர் வாதிட வேண்டாம். நிச்சயமாக அல்லாஹ் பெரும் மோசடிக்காரனான குற்றவாளியை நேசிக்கமாட்டான். (4:105 – 107)

‘‘எவர்கள் மார்க்க (விஷய)த்தில் உங்களிடம் போரிடவில்லையோ அவர்களுக்கும் மேலும் உங்களை உங்கள் இல்லங்களிலிருந்து வெளியேற்ற வில்லையோ அவர்களுக்கும் நீங்கள் நன்மை செய்வதையும், அவர்களுக்கு நீதியாக நடப்பதையும் அல்லாஹ் உங்களுக்கு தடுக்கவில்லை – நிச்சயமாக அல்லாஹ் நீதியாக நடப்பவர்களை நேசிக்கின்றான் (60:8)

‘‘நம்பிக்கைகொண்டோரே! உங்களுக்குமுன் வேதம் வழங்கப்பட்டவர்களில் உங்கள் மார்க்கத்தைப் கேலியாகவும் விளையாட்டாகவும் எடுத்துக் கொண்டவர்களையும் இன்னும் நிராகரிப்பாளர்களையும் நேசர்களாக எடுத்துக் கொள்ளாதீர்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். (5:57)

முஸ்லிம்களை எதிர்த்து போர்புரிபவர்களுடனும் முஸ்லிம்களை அவர்களது வீடுகளிலிருந்து வெளியேற்றியவர்களுடனும் நேசம் பாராட்டக்கூடாது என அல்குர்ஆனில் பல இடங்களில் தெளிவாக கூறப்பட்டுள்ளது.

‘‘எவர்கள் மார்க்க விடயத்தில் உங்களுடன் போரிட்டு உங்களை உங்கள் இல்லங்களை விட்டும் வெளியேற்றினார்களோ அவர்களையும் மேலும் உங்களை வெளியேற்றிட உதவி செய்தார்களோ அவர்களையும் நேசத்திற்குரியவர்களாக எடுத்துக் கொள்வதையே அல்லாஹ் உங்களுக்கு தடுக்கிறான். அவர்களை யார் நேசர்களாக எடுத்துக் கொள்கிறார்களோ அவர்கள் தாம் அநியாயக்காரர்கள். (60:9)

**யூ**த கிறிஸ்தவர்கள் அனைவரும் முஸ்லிம்களின் எதிரிகள் அல்லர். அவர்களில் நன்மையை ஏவி தீமையை தடுக்கின்ற நல்லவர்களும் இருக்கின்றார்கள். நன்மைக்காக பாடுபடுகின்ற நேரான கொள்கையுடையவர்களும் இருக்கின்றார்கள். எனவே அவர்களின் கூலியை அல்லாஹ் ஒரு போதும் வீணடிக்க மாட்டான் என குர்ஆனில் பல இடங்களில் தெளிவுப்படுத்துகின்றான்.

‘‘அவர்கள் (அனைவரும்) சமமானவர்கள் அல்லர். வேதத்தையுடையோரில் (சத்தியத்தில்) நிலைத்திருக்கும் கூட்டத்தினரும் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை இரவு வேளைகளில் ஓதி சிரம்பணிகின்றனர். அவர்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொள்கின்றனர். மேலும் நன்மையை ஏவி தீமையை விட்டும் தடுத்து நல்ல காரியங்கள் புரிவதிலும் விரைகின்றார்கள். இவர்களே நல்லடியார்களில் உள்ளவர்களாவர். (3:113 – 114)

‘‘நிச்சயமாக வேதமுடையோரில் அல்லாஹ்வையும் (முஸ்லிம்களாகிய) உங்களுக்கு இறக்கப்பட்டதையும் அவர்களுக்கு இறக்கப்பட்டதையும் அல்லாஹ்வை அஞ்சியவர்களாக நம்பிக்கை கொள்வோரும் உள்ளனர். அல்லாஹ்வின் வசனங்களை அவர்கள் அற்ப விலைக்கு விற்கமாட்டார்கள். இத்தகையோருக்குரிய கூலி அவர்களது இரட்சகனிடம் அவர்களுக்கு உண்டு. நிச்சயமாக அல்லாஹ் விசாரணை செய்வதில் தீவிரமானவன். (3:199)

‘‘நிச்சயமாக நம்பிக்கைக்கொண்டோர் மற்றும் யூதர்கள் கிறிஸ்தவர்கள் ஸாபியீன்கள் (ஆகியோரில்) யார் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கைக் கொண்டு நல்லறம் புரிந்தார்களோ

அவர்களுக்குரிய கூலி அவர்களது இரட்சகனிடம் அவர்களுக்கு உண்டு. அவர்களுக்கு யாதொரு பயமும் இல்லை அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள். (2:62)

## 5. பகுத்தறிவு ரீதியான தர்த்தகத்தை தோற்கடித்து இப்பிரப்பஞ்சத்தை உற்றுநோக்குமாறு இஸ்லாம் அழைப்புவிடுத்தல்

குறுட்டுத்தனமான நம்பிக்கையின் பால் அழைப்பது இஸ்லாத்தின் நோக்கமல்ல. அல்லாஹ்வின் அத்தாட்சிகளையும் எந்த முன்மாதிரியுமின்றி அவன் படைத்த படைப்புகளை சிந்திக்கும்படியும் பூமியின் பல பாகங்களுக்குச் சென்று பிரபஞ்சத்தை உற்று நோக்கும் படியும் முழு மனித சமூகத்தையும் அழைக்கின்றது. புத்தியை பயன்படுத்தி சிந்தனை ஆக்கத்திற்கு செயல்வடிவம் கொடுக்குமாறும் இஸ்லாம் அழைப்பு விடுக்கின்றது

இது மட்டுமல்ல உலகின் அனைத்துப் பகுதிகளையும் மனித படைப்பின் உருவாக்கத்தையும் மீண்டும் மீண்டும் உற்றுநோக்குமாறு – ஆய்வு செய்யுமாறு – கூறுகின்றது. அப்போது அவன் ஆய்வு செய்தவற்றுக்கான பதிலை திடமாக கண்டுக் கொள்வான். சந்தேகமின்றி இவைகளை

படைத்தவன் ஒருவன் தான் என நம்பிக்கை கொண்டு பூரண திருப்திக் கொள்வான்.

நிச்சயமாக இப்பிரபஞ்சம் மிக கவனமாக உருவாக்கப்பட்டு ஒரு நோக்கத்ததோடு நிர்வகிக்கப் படுகின்றது என்பதை உறுதியாக நம்புவான். இறுதியில் வணங்கப் படத தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாருமில்லை என்று இஸ்லாம் கூறும் முடிவுக்கு வந்துவிடுவான்.

‘‘அவனே ஏழு வானங்களையும் தட்டுத்தட்டாகப் படைத்தான். அர்ரஹ்மானின் படைப்பில் நீர் எவ்வித குறைபாட்டையும் காணமாட்டீர். மீண்டும் (ஒரு தடவை)பார்வையை மீட்டுவீராக (அவற்றில்) ஏதேனும் பிளவுகளைக் காண்கிறீரா? பின்னர் இரு தடவை பார்வையை மீட்டுவீராக பார்வை சோர்வடைந்து சிறுமையடைந்ததாக உம்பக்கம் திரும்பும். (67:3 – 4)

‘‘நிச்சயமாக இது உண்மை என்பது அவர்களுக்குத் தெளிவாகும் வரை பல பாகங்களிலும் அவர்களுக்குள்ளேயும் நமது அத்தாட்சிகளை நாம் அவர்களுக்கு காட்டுவோம் நிச்சயமாக உமது இரட்சகன் யாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கின்றான் என்பது அவன் விடயத்தில் போதுமாக இல்லையா? (41:53)

‘‘வானங்கள் மற்றும் பூமியைப் படைத்ததிலும் இரவு பகல் மாறி மாறி வருவதிலும் மனிதர்களுக்குப் பயன் தருபவற்றை கடலில் கொண்டு செல்லும் கப்பல்களிலும் வானத்திலிருந்து அல்லாஹ் மழையை இறக்கி பூமி இறந்த பின் அதனை அவன் இதன் மூலம் உயிர்ப்பிப்பதிலும் எல்லாவிதமான உயிரிணங்களை அவன் அதில் பரவச் செய்திருப்பதிலும் காற்றுகளை சுழலச் செய்வதிலும் வானம் பூமிக்கிடையில் வசப்படுத்தப்பட்டுள்ள மேகத்திலும் விளங்கிக் கொள்ளும் சமூகத்திற்கு நிச்சயமாக பல அத்தாட்சிகள் உள்ளன. (2:164)

‘‘அவனே உங்களுக்கு இரவையும் பகலையும் சூரியனையும் சந்திரனையும் வசப்படுத்தித் தந்தான். நட்சத்திரங்களும் அவன் கட்டளைக்கு வசப்படுத்தப்பட்டவைகளாகும். நிச்சயமாக இதில் விளங்கிக் கொள்ளும் சமூகத்திற்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன (16:12)

‘‘வானத்தை வலிமைமிக்கதாக நாம அமைத்தோம் மேலும் நிச்சயமாக நாம் விரிவுபடுத்தக் கூடியவர்கள். (51:47)

‘‘வானத்திலிருந்து மழையை நாமே அளவோடு இறக்கி அதனைப் பூமியில் சேமித்து வைத்தோம் நிச்சயமாக நாம் அதைப் போக்கி விடுவதற்கும் ஆற்றலுடையோரே! மேலும் அதன் மூலம்

உங்களுக்கு பேரீச்சை மற்றும் திராட்சைத் தோட்டங்களை உருவாக்கினோம். அவற்றில் உங்களுக்கு அதிகமான கனிகள் இருக்கின்றன. அவற்றிலிருந்து நீங்கள் உண்ணுகின்றீர்கள். (23:18 – 19)

‘‘நிச்சயமாக அல்லாஹ் வானத்திலிருந்து மழையை 6இறக்கி அதனை பூமியில் ஊற்றுக்களாக ஓடச் செய்வதையும் பின்னர் அதன்மூலம் பல்வேறு நிறங்களுடைய பயிர்களை வெளிப் படுத்துவதையும் நீர் பார்க்க வில்லையா? பின்னர் அவை காய்ந்து மஞ்சல் நிறமாவதை நீர் காண்கிறீர் பின்னர் அவனே அவற்றை சருகுகளாக ஆக்கின்றான். நிச்சயமாக இதில் சிந்தனையுடையோருக் உபதேசம் இருக்கின்றது. (39:21)

‘‘நிச்சயமாக வானங்களும் பூமியும் இணைந்தே இருந்தன நாம் அவ்விரண்டையும் பிரித்தோம். என்பதையும் உயிருள்ள ஒவ்வொன்றையும் நீரில் இருந்து நாமே உருவாக்கினோம் என்பதையும் நிராகரித்தோர் அறியவில்லையா? அவர்கள் நம்பிக்கைக் கொள்ள வேண்டாமா?

இன்னும் பூமி அவர்களை சரித்து விடாதிருக்க அதில் மலைகளை 7 நாம் ஏற்படுத்தினோம் மேலும் அவர்கள் (தாம் விரும்பும் இடங்களுக்கு)

சென்றடையும் பொருட்டு அதில் விசாலாமான பாதைகளையும் 8 நாம் ஏற்படுத்தினோம். (21:30 – 31)

‘‘நிச்சயமாக நாம் (முதல்) மனிதனை களிமண் எனும் மூலத்திலிருந்து படைத்தோம். பின்னர் பாதுகாப்பான ஓரிடத்தில் அவனை நாம் இந்திரியத்துளியாக வைத்தோம். பின்னர் இந்திரியத் துளியை (கருவறைச்சுவரில்) ஒட்டிக் கொள்ளக் கூடியதாகப் படைத்தோம். பின்னர் (கருவறைச் சுவரில்) ஒட்டிக் கொள்ளக்கூடிய சதைப்பிண்டமாக்கினோம். பின்னர் அவனை வேறொரு படைப்பாக ஆக்கினோம். 9 படைப்பாளர்களில் மிகச் சிறந்தவனான அல்லாஹ் பாக்கியமுடையவனாவான். (23 :12 – 14)

‘‘மனிதர்களே! (மரணித்த பின்) எழுப்பப்படுவதில் நீங்கள் சந்தேகத்தில் இருந்தால் (அறிந்து கொள்ளுங்கள்) நிச்சயமாக நாம் தான் மண்ணிலிருந்தும் பின்னர் இந்திரியத்துளியிலிருந்தம் பின்னர் (கருவறைச்சுவரில்) ஒட்டிக் கொள்ளக்கூடியதிலிருந்தும் பின்னர் வடிவமைக்கப்பட்டதும் வடிவமைக்கப்படாததுமான சதைப்பிண்டத்திலிருந்தும் உங்களைப் படைத்தோம். உங்களுக்கு தெளிவுப்படுத்துவதற்காகவே (இதை

விபரிக்கின்றோம்) குறிப்பிட்ட காலம் வரைக்கும் நாம் நாடுபவற்றைக் கருவரைகளில் தரிபடுத்துகின்றோம். பின்னர் சிசுவாக உங்களை வெளியேற்றுகின்றோம். உங்கள் இளமையை நீங்கள் அடைவதற்காக (ஆயுளை ஏற்படுத்தினோம் இளமையில்) மரணிப்போரும் உங்களில் உள்ளனர். மேலும் அறிந்த பின் எதையுமே அறியாதவராய் ஆகிவிடக்கூடிய தளர்ந்த வயதின்பால் தள்ளப்படுவோரும் உங்களில் உள்ளனர். **10 - 11** நீர் பூமியை வரண்டதாகக் காண்கின்றீர். நாம் அதன் மீது மழையை இறக்கினால் அது அதிர்வுற்று வளமாகி அழகான அனைத்து வகை புற்பூண்டகளையும் முளைப்பிக்கச் செய்கிறது. (௨௨:5)

‘‘(நபியே யாவற்றையும்) படைத்த உமது இரட்சகனின் பெயரைக் கெண்டு நீர் ஓதுவீராக. (96:1)

‘‘(நிராகரிப்பவன் சிறந்தவனா?) அல்லது மறுமையைப் பயந்து தனது இரட்சகனின் அருளை ஆதரவு வைத்து சுஜூது செய்தவராகவும் நின்றவராகவும் இரவு நேரங்களில் அடிபணிந்து வழிபடுபவரா? அறிந்தோரும் அறியாதோரும் சமமானவர்களா என (நபியே) நீர் கேட்பீராக

சிந்தனையுடையோர்தாம் நல்லுபதேசம் பெறுவார்கள்.(39:9)

‘‘இன்னும் இவ்வாறே மனிதர்களிலும் ஊர்வனவற்றிலும் கால் நடைகளிலும் மாறுப்பட்ட பல நிறங்கள் உள்ளன அல்லாஹ்வின் அடியார்களில் அவனை அஞ்சுபவர்கள் அறிஞர்களே நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவன் மிக்க மன்னிப்பவன். (35:28)

_ _ _ _ _ _ _ _ _ _

6. நவீன அறிவியலின் கண்டுபிடிப்பின்படி, நீர் சுழற்சி 500 ஆண்டுகளுக்கு முன்பே அது பற்றி வர்ணிக்கப் பட்டுள்ளது. அதற்கு முன், மனிதர்கள் கடல்கள் மற்றும் நிலத்தடி நீரூற்றுகளிலிருந்து தண்ணீர் வந்ததாக நம்பினர், இதனால் நீர் சுழற்சி உருவாகிறது. மேலும், மண்ணின் ஈரப்பதம் இருந்ததால், தண்ணீரின் அடர்த்தி அதிகரித்தது. இதற்கிடையில், 1400 ஆண்டுகளுக்கு முன்பு நீர் உருவானதை புனித குர்ஆன் தெளிவாக விவரிக்கிறது.

7. உயிரினங்களில் தண்ணீர்தான் அதிக அளவில் உள்ளது என்று நவீன அறிவியல் கண்டறிந்துள்ளது. ஒரு உயிரினத்தின் உடலின் முக்கிய அங்கமாக நீர் உள்ளது. ஆனால் அது முஹம்மது நபி (ஸல்) அவர்களின் காலத்தில் கல்வி அறிவினால் புறப்பட்ட ஒரு விடயமாக இருக்கவில்லை. மற்றும் தாவரங்களுக்கு இடையிலான சமநிலை பற்றி அறிவும் அக்காலத்தில் இருக்கவில்லை.

8. பூமியின் மேற்பரப்பின் சமநிலையை பராமரிப்பதில் மலைகள் வகிக்கும் பங்கு பற்றிய சமீபத்திய கோட்பாடுகள், மலையின் மேல் பகுதி ஒப்பீட்டளவில் மெல்லியதாகவும், கீழ் பகுதி கனமாகவும் இருப்பதைக் குறிக்கிறது. இது திருக்குர்ஆனின் போதனைகளைப் போன்ற ஒரு கோட்பாடு.

9. கனடிய அறிஞர் (கீத் மூர்) உடற்கூறியல் மற்றும் கருவில் பற்றிய மிகப் பெரும் ஒரு அறிவியலாளர். அவர் பல பல்கலைக்கழகங்கள் ஊடாக அற்புதமான அறிவியல் பயணம் மேற்கொண்ட (அனுபவம், அறிவு நிறைந்த) ஒருவராக உள்ளார். பல சர்வதேச கல்வி நிறுவனங்களுக்குத் தலைவராக இருந்துள்ளார்."கனடா அமேரிக்கா" உடற்கூறியல் மற்றும் கருவியல் சங்கம், "உயிரியல் பற்றிய மாநாடு", அதேபோல் "கனடா அரச மருத்துவ சங்கத்தின்" உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார், அதேபோல் "உயிரணுவியல்" பற்றிய அகாடமியில், மற்றும் கருவியல் பற்றிய அமெரிக்க வைத்தியர்களின் சங்கத்தின் முக்கிய பொறுப்புகளிலும் நியமிக்கப் பட்டவராவார்.

1980 இல், (கீத் மூர்) தான் இஸ்லாத்தை ஏற்பதாக பகிரங்கமாக அறிவித்தார். புனித குர்ஆனின் வசனங்களை வாசித்தன் பின்னரே, குறிப்பாக நவீன அறிவியலை மிஞ்சி நிற்கும் வகையிலான கருவில் சிசுவின் அமைப்பு, பற்றிய ஆய்வுகளின் பின்னரே (அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்.) தான் இஸ்லாத்தை ஏற்ற சந்தர்ப்பத்தை பற்றி விளக்கும் போது : "எழுபதுகளின் பிற்பகுதியில், "மொஸ்கவ்" நகரத்தின் "அறிவியல் அற்புதங்கள்" என்ற கருப்பொருளில் அமையப் பெற்ற சர்வதேச மாநாட்டிற்கு நான் அழைக்கப் பட்டேன். அங்கு சில இஸ்லாமிய அறிஞர்கள் பிரபஞ்சம் பற்றி திருமறை வசனங்களை முன்வைத்தனர். குறிப்பாக; ((வானத்திலிருந்து பூமிவரை உள்ள காரியத்தை (அல்லாஹ்வாகிய) அவன் நிர்வகிக்கின்றான், பின்னர் (நிர்வகிக்கப்பட்ட காரியமான) அது நீங்கள் எண்ணுகின்ற (உங்கள்) கணக்கின்படி ஆயிரம் வருடங்களாக அதனுடைய அளவு இருக்கும் (அந்)நாளில் அவன் பக்கம் உயரும்.)) 32:5 என்ற வசனம், தொடர்ந்தும் ஒன்றன் பின் ஒன்றாக, கருவின் அமைப்பு, மனிதனின் கட்டமைப்பு என வசனங்களை அடுக்கினார்கள். தொடர்ந்தும் அதன் வசனங்களை அறியும் ஆவலுடன் அமைதியாகவும், செவிசாய்ப்பவனாகவும் இருந்தேன். அதன் வசனங்கள் எல்லோருக்கும் மிகப் பெரிய பதில்களாக அமைந்தன. எண்ணெய் பொறுத்தமட்டில், எனது உள்ளத்தில் புதுவித தாக்கத்தை உண்டுபண்ணியது. நான் உணர ஆரம்பித்தேன். இதுதான் எனக்கு வேண்டியது. இது தான் சத்தியம், இதையே நான் எனது ஆய்வுகளின் ஊடாக, செயல்பாடுகள் மற்றும் நவீன அறிவியலின் ஊடாக தேடினேன். எனினும் திருமறை அல்-குர்ஆனோ அதனை முழுமையாகவும், அனைத்தயும் உள்ளடக்கியதாகவும், நவீன அறிவியலுக்கு முன்னதாகவே கொடுத்துள்ளது.

10. பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் அதன் படைப்பாளரின் கட்டுப்பாட்டில் உள்ளது. எல்லாவற்றையும் பற்றிய முழு விவரங்கள் மற்றும் முழுமையான அறிவு, அத்துடன் அனைத்தையும் தனக்கே சொந்தமாக்கிக் கொள்ளும் திறனும் வலிமையும் அவரிடம் உள்ளது. சூரியனைப் போலவே கோள்கள், விண்மீன் திரள்கள் (galaxies) மிக நுட்பமாகச் செயல்படுகின்றன. இந்த நுணுக்கமும் திறமையும் மனித படைப்புக்கும் பொருந்தும். உடம்பில் உள்ள ஆன்மாவைப் பற்றிச் சிறிது சிந்தித்தால், உடலை ஆன்மாவுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, மனித உடலில் ஆன்மாவை வைத்தவர், விலங்கு உடலில் வாழ்ந்து, தாவரங்கள் ஊடாக செல்வதற்கு வாய்ப்பில்லை என்பதை எளிதில் அடையாளம் காணலாம். (மறுபிறவி அல்லது மறுபிறப்பு மூலம் ஒரே ஆன்மா வெவ்வேறு உடல் கூண்டுகளில் வாழ்கிறது என்ற நம்பிக்கை) ஒரே கடவுள் மனிதனை அனைத்து உயிரினங்களிலும் தனித்துவமான ஒன்றாக ஆக்கினான் . அதாவது, நல்லது கெட்டது இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் அறிவாற்றலையும், தன்னைச் சுற்றி நடக்கும் விஷயங்களைப் பற்றிய தகவல்களை எளிதில் புரிந்து கொள்ளும் திறனையும் கொடுத்து, அவரை இந்த பூமிக்குரிய முகவராக நியமித்து, அவரை தனித்துவமாகவும், கௌரவமாகவும், உயர்ந்தவராகவும் ஆக்குவதன் மூலம். மற்ற உயிரினங்கள் மத்தியில் தனித்துவமான ஒரு படைப்பாக ஆக்கினான்.

(ஏக இறைவனின்) நீதி என்னவென்றால், அவர் ஒரு நியாயத்தீர்ப்பு நாளை (மனிதர்களின் செயல்கள் மீதான அவரது இறுதி தீர்ப்புக்காக) நிறுவியுள்ளார். அங்கு நன்மை தீமைகள் எடைபோடப்படுகின்றன. சொர்க்கத்தையும் நரகத்தையும் ஏற்படுத்தியுள்ளான். ((எவர் அணுவளவு நன்மை செய்வாரோ அவர் அதைக் (மறுமை நாளில்) காண்பார். மேலும் எவர் அணுவளவு தீமை செய்வாரோ அவர் அதை (மறுமை நாளில்) காண்பார்.)) திருக்குர்ஆனின் 99 வது அத்தியாயத்தின் 7 மற்றும் 8 வசனங்கள்.

11. நவீன அறிவியலின் சமீபத்திய கண்டுபிடிப்புகளின்படி கரு வளர்ச்சியின் சரியான நிலைகளே இவை.

## 6.முதல் பாவத்தன் சுமையிலிருந்து மனிதனை இஸ்லாம் விடுவித்தல்

குழந்தைகள் பாவமற்றவர்களாக பிறக்கின்றன. தன் இரட்சகனுக்கு மாறு செய்த முதல் மனிதன் ஆதம் (அலை) அவர்களின பாவமன்னிப்பையும் பிழைபொறுப்பையும் அல்லாஹ் ஏற்றுக் கொண்டான். மனிதனின் பாவத்தை அல்லாஹ் மன்னிக்கின்றான் என்பதற்கு முன்மாதிரிமிக்க முதல் பாடம் இது..

ஒவ்வொரு மனிதனும் அவனது பாவங்களுக்கு பொறுப்பாளியாவான். ஒவ்வாரு ஆன்மாவும் தாம் சம்பாதித்தவறறிருக்கு அடகுவைக்கப்பட்டிருக்கிறது. இது தான் அல்லாஹ்வின் நீதியாகும். (74:38)

‘‘ஈமான் கொண்டு நல்லறம் புரியாமல் எவரும் வெற்றியை பெற்றுக்கொள்ள முடியாது என்பது போல், தான் செய்யாத எந்தப்பாவத்திற்கும் மனிதன் (குற்றவாளியாகமாட்டான்) விசாரிக்கப்படவும் மாட்டான். அல்லாஹ் மனிதனுக்கு வாழ்வை கொடுத்து அவனுக்கு (நன்மை தீமையை) தேர்வு செய்யும் உரிமையையும் வழங்கியுள்ளான் இது அவனுக்குரிய சோதனையாகும். அவனது நடவடிக்கைகளுக்கு அவனே பொறுப்பாளியாவான்.

எந்தவொரு ஆன்மாவும் மற்றதன் பாவச் சுமையைச் சுமக்காது [12] (பாவச்) சுமை கனத்த ஆன்மா அதைச் சுமப்பதற்கு (எவரையேனும்) அழைத்த போதிலும் (அழைக்கப்பட்டவன்) உறவினராக இருந்த போதிலும் அதிலிருந்து எதையும் அவன்மீது சுமத்தப்பட மாட்டாது. எவர்கள் தமது இரட்சகனை மறைவிலும் அஞ்சி தொழுகையை நிலைநாட்டுகின்றனரோ அவர்களுக்கே நீர் எச்சரிக்கை செய்கிறீர். எவர் பரிசுத்தமாகின்றாரோ அவர் தனக்காவே பரிசுத்தமாகின்றார். அல்லாஹ்விடமே மீளுதல் உள்ளது. (35:18)

‘‘ஒரு விலங்கு எப்படி முழு வளர்ச்சிப் பெற்ற விலங்கைப் பெற்றெடுக்கிறதோ அதைப்போன்று, எல்லாக் குழந்தைகளுமே இயற்கையான (இஸ்லாமிய மார்க்கத்) திலேயே பிறக்கின்றன. விலங்குகள் அங்கக் குறைவுடன் பிறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? (முழுமையான விலங்கை அங்க சேதப்படுத்துவது போல்) பெற்றோர்கள் தாம் குழந்தைகளை (இயற்கையான மார்க்கத்தைவிட்டுத் திருப்பி) யூதர்களாகவோ கிறித்தவர்களாகவோ நெருப்பு வணங்கிகளாகவே ஆக்கிவிடுகின்றனர் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர: அபூஹுரைரா (ரலி) நூல: புகாரி 1385)

— — — — — — — — — —

| |
|---|
| 12. "பிள்ளைகளுக்காகத் தந்தையரும், தந்தையருக்காகப் பிள்ளைகளும் கொல்லப்பட வேண்டாம். அவரவர் தம் பாவத்திற்காகக் கொல்லப்படட்டும்." இணைச் சட்டம் அதிகாரம் - 24 : 16 |

## 7. மனிதனும் இஸ்லாமும் பிரபஞ்சத்துடன் ஒத்துப்போகுதல்

பிரப்பஞ்சத்திலுள்ள அனைத்துப் படைப்புகளும், படைப்பாளனாகிய அல்லாஹ்வை கண்ணியப் படுத்துகின்றது துதிக்கின்றது. இஸ்லாம் மனிதனுக்கும் படைத்தவனுக்குமிடையில் இயற்கையான தொடர்ப்பை ஏற்படுத்தியுள்ளது அத்தொடர்ப்பை அடைவதற்கான சரியான பாதையையும் காண்பிக்கிறது.

''அல்லாஹ்வின் மார்க்கம் அல்லாததையா இவர்கள் விரும்புகின்றார்கள்? வானங்களிலும் பூமியிலும் உள்ள அனைத்தும் விரும்பியோ விரும்பாமலோ அவனுக்கே அடிபணிகின்றன. மேலும் அவனிடமே அவர்கள் மீட்டப்படுவார்கள். (3:83)

''வானங்கள் மற்றும் பூமியில் உள்ளவையும் அவற்றில் நிழல்களும் விரும்பியோ விரும்பாமலோ காலையிலும் மாலையிலும் அல்லாஹ்வுக்கே சுஜூது செய்கின்றன.(13:15

## 8 கற்பைப் பேணுமாறும் வெட்கத்தை கைகொள்ளுமாறும் இஸ்லாம் அழைப்புவிடுத்தல்

உயர்பண்புகள் வீழ்ச்சி அடைந்து குடும்ப வாழ்வு சீர்கெடும் வேளையில் அவைகளை நிவர்த்திப்பதற்கான தீர்வுகளை அல்குர்ஆன் முன்வைக்கிறது.

‘‘ஆதமுடைய சந்ததியினரே! உங்கள் வெட்கத்தலங்களை மறைக்கும் ஆடையையும் அலங்காரத்தையும் நாம் இறக்கியிருக்கின்றோம் எனினும் (பயபக்தி எனும்) தக்வாவுடைய ஆடையே மிகச் சிறந்ததாகும். இவை அவர்கள் நல்லுபதேசம் பெறுவதற்காக (கூறப்படும்) அல்லாஹ்வின் வசனஙகளில் உள்ளவைகளாகும். (7:26

‘‘நம்பிக்கையாளர்களான ஆண்களிடம் அவர்கள் தமது பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் (நபியே) நீர் கூறுவீராக. இதுவே அவர்களுக்கு மிகப் பரிசுத்தமானதாகும். நிச்சயமாக அவர்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிவான்.

நம்பிக்கையாளர்களான பெண்களிடம் அவர்கள் தமது பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் தமது கற்புகளைப் பாதுகாத்துக் கொள்ளுமாறும் அவர்களது அலங்காரத்தில் வெளிப்படுவதைத்தவிர வேறு எதையும் அவர்கள்

வெளிப்படுத்தக் கூடாது என்றும் தமது முந்தானைகளை தமது மார்பங்கள் மீது போட்டுக் கொள்ளுமாறும் (நபியே) நீர் அவர்களுக்குக் கூறுவீராக.

மேலும் அவர்கள் தங்கள் அலங்காரத்தைத் தமது கணவன்மார்கள் அல்லது தமது தந்தையர் அல்லது தமது கணவன்மார்களின் தந்தையர் அல்லது தமது ஆண்மக்கள் அல்லது தமது கணவன்மார்களின் ஆண்மக்கள் அல்லது தமது சகோதரர்கள் அல்லது தமது சகோதரர்களின் ஆண்மக்கள் அல்லது தமது சகோதரிகளின் ஆண்மக்கள் அல்லது தமது பெண்கள் அல்லது தமது அடிமைகள் அல்லது பெண்கள் மீது நாட்டம் அல்லாது (அவர்களை) அண்டி வாழும் (வயோதிப) ஆண்கள் அல்லது பெண்களின் மறைவிடங்கள் பற்றி விளங்கிக் கொள்ளாத சிறுவர்கள் ஆகியோரைத் தவிர ஏனையவர்களிடம் வெளிப்படுத்த வேண்டாம். தாம் மறைத்திருக்கும் தமது அலங்காரம் அறியப்படுவதற்காக தமது கால்களால் தட்டவும் வேண்டாம் நம்பிக்கை யாளர்களே! நீங்கள் வெற்றி பெறும் பொருட்டு நீங்கள் அனைவரும் அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருங்கள். (24:30 – 31)

''நபியே! உமது மனைவியருக்கும் உமது புதல்வியருக்கும் நம்பிக்கையாளர்களின்

பெண்களுக்கும் அவர்கள் தமது முந்தானைகளைத் தங்கள் மீது தொங்க விடுமாறு கூறுவீராக. அவர்கள் அறியப்படுவதற்கும் நோவினைப்படுத்தப்படாமல் இருப்பதற்கும் இதுவே மிக நெருக்கமானதாகும். மேலும் அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும் நிகரற்ற அன்புடையவனாகவும் இருக்கின்றான். (33:59)

## 9. சகிப்புத்தன்மை நடுநிலை மற்றும் சமநிலை பேணுதல்

(எல்லாவிடயங்களிலும் நடுநிலை வகிக்குமாறும் எல்லை மீறி செயற்படக் கூடாது என்றும் இஸ்லாம் வலியுறுத்துகிறது.)

‘‘(மற்ற) மனிதர்களுக்கு நீங்கள் சாட்சியாளர்களாகவும் இந்தத் தூதர் உங்களுக்குச் சாட்சியாளராக இருப்பதற்கும் இவ்வாறே உங்களை நடுநிலையான சமுதாயமாக ஆக்கினோம். (2:143)

‘‘உங்களது மார்க்கம் உங்களுக்கு எனது மார்க்கம் எனக்கு (109:6)

‘‘ஆதமுடைய சந்ததியினரே! தொழுமிடத்திலெல்லாம் (ஆடைகள் எனும்) உங்கள் அலங்காரத்தை எடுத்துக் கொள்ளுங்கள் இன்னும் உண்ணுங்கள் பருகுங்கள் வீண் விரயம்

செய்யாதீர்கள். நிச்சயமாக அவன் வீண் விரயம் செய்பவர்களை நேசிக்கமாட்டான். (7:31)

(நீர் செலவு செய்யாது) உமது கையை உமது கழுத்தில் கட்டப்பட்டதாக ஆக்கிக் கொள்ளாதீர். மேலும் (அனைத்தையும் செலவு செய்து) அதனை முழுமையாக விரித்து விடவும் வேண்டாம். அவ்வாறாயின் நீர் இழிவுப்படுத்தப்பட்டவராகவும் கைசேதப்பட்ட வராகவும் ஆகிவிடுவீர். (17:29)

வாங்கும் பொழுதும் விற்கும் பொழுதும் வழக்குரைக்கும் பொழுதும் பெருந்தன்மையாக நடந்து கொள்ளும் மனிதருக்கு அல்லாஹ் அருள் புரிவானாக என இறைத் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) ( நூல : புகாரி 2076)

## 10. அல்லாஹ்வின் அருளில் நிராசை கொள்ளாதிருத்தல்

(அல்லாஹ் அடியார்கள் மீது அன்புள்ளவன் கருணையுள்ளவன். அடியார்கள் தங்கள் தவறுகளை பாவங்களை உணர்ந்து அல்லாஹ்வின்பால் மீள வேண்டும், மன்னிப்புக் கோர வேண்டும். அல்லாஹ் நம்மை மன்னிக்க மாடட்டான், மீட்சிக்கான வழியைக் காட்டமாட்டான் என நிராசை கொளளக் கூடாது. என்று இஸ்லாம் வலியுறுத்துகிறது.)

‘‘அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையவனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் (ஆரம்பிக்கிறேன்) (1:1)

தமக்குத் தாமே (அநியாயம் செய்து) வரம்பு மீறிய எனது அடியார்களே! நீங்கள் அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கையிழந்து விடவேண்டாம். நிச்சயமாக அல்லாஹ் அனைத்துப் பாவங் களையும மன்னிப்பான். நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவன் நிகரற்ற அன்புடையவன் என நபியே நீர் கூறுவீராக (39:53)

‘‘பூமியில் சீர் திருத்தம் ஏற்பட்ட பின் அதில் நீங்கள் குழப்பம் விளைவிக்காதீர்கள். அச்சத்தோடும் ஆசையோடும் அவனை அழையுங்கள் நிச்சயமாக அல்லாஹ்வின் கருணை நன்மைசெய்வோருக்கு நெருக்கமாகவே இருக்கின்றது.(7:59)

எமது வசனங்களை நம்பிக்கைக் கொண்டோர் உம்மிடம் வந்தால் உங்கள் மீது சாந்தி உண்டாவதாக என்று கூறுவீராக! உங்களது இரட்சகன் கருணைக்காட்டுவதைத் தன்மீது கடமையாக்கிக் கொண்டான். நிச்சயமாக உங்களில் யார் அறியாமையின் காரணமாக ஏதேனும் ஒரு தீமையைச் செய்து இதன் பின்னரும் பாவமன்னிப்புக் கேட்டு (தன்னைச்) சீர்படுத்திக்

கொண்டால் நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவன் நிகரற்ற அன்புடையவன் (6:54)

‘‘அல்லாஹ் படைப்புகளைப் படைத்தபோது தன்னுடைய (“லவ்ஹுல் மஹ்.:பூழ்“ என்னும்) பதிவேட்டில் – அது அர்ஷுக்கு மேலே அவனிடம் உள்ளது – “என் கருணை என் கோபத்தை மிகைத்து விட்டது என்று எழுதினான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) ( நூல் புகாரி 3194)

## 11. சமத்துவம் ஒருமைப்பாட்டின் பால் அழைப்பு விடுத்து இனவாத பிரிவினைக்கு எதிராக போராட அழைப்பு விடுத்தல்

ஏனைய படைப்புகளை விட மனிதனை அல்லாஹ் கண்ணியப்படுத்தியுள்ளான். எல்லா இன மக்கள் மத்தியில் சமத்தைுவத்தைப் பேணிட அல்லாஹ் அழைப்பு விடுக்கின்றான்.

‘‘நிச்சயமாக நாம் ஆதமுடைய சந்ததியினரை கண்ணியப்படுத்தினோம். இன்னும் தரையிலும் கடலிலும் அவர்களை நாம் சுமந்து சென்றோம். மேலும் நாம் தூய்மை யானவற்றிலிருந்து அவர்களுக்கு உணவளித்தோம். நாம் படைத்த பலவற்றை விடவும் இவர்களை மிக்க மேன்மைப் படுத்தினோம் (17:70)

இஸ்லாத்தில் கண்ணியம் மரியாதை என்பது இறையச்சதின் மீதும், நல்லிணக்கம் மீதும் கட்டமைக்கப்பட்டுள்ளது.

‘‘மனிதர்களே! நிச்சயமாக நாம் உங்களை ஓர் ஆண் ஒரு பெண்ணிலிருந்தே படைத்து நீங்கள் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்வதற்காக உங்களைக் கிளைகளாகவும் கோத்திரங்களாகவும் ஆக்கினோம். உங்களில் மிகப் பயபக்தியுடையவரே நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் உங்களில் மிக கண்ணியத்திற்குரியவர். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவன். நுட்பமானவன் (49:13)

மனிதர்களே! நிசச்யமாக உங்கள் இரட்சகள் ஒருவனே உங்கள் தந்தையும் ஒருவரே அறிந்து கொள்ளுங்கள் இறையச்சத்தை (யுடையவரைத்) தவிர உங்களில் அரபியல்லாதவரை விட அரபியருக்கு எந்த சிறப்புமில்லை. அரபியை விட அரபியல்லாதவருக்கும் எந்த சிறப்பும் இல்லை கறுப்பரை விட சிவந்தவருக்கோ, சிவந்தவரை விட கறுபப்பருக்கோ எந்த சிறப்பும் இல்லை. (இறையச்சமே உங்கள் சிறப்பை தீர்மானிக்கிறது.) என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர: அபூ நழ்ர் (ரலி) (நூால: அஹ்மத்)

சமத்துவத்துவமும் ஒருமைப்பாடும் இஸ்லாமிய வழிபாடுகளிலுள்ளதாகும் . அதனை பின்வருமாறு குறிப்பிடலாம்.

1 தொழுகை

முஸ்லிம்கள் தொழுகைக்காக அணிவகுத்து நிற்கின்றபோது எந்த வேற்றுமையும் உயர்வும் தாழ்வுமின்றி ஒருவருக்கொருவர் பக்கத்தில் நின்று வணங்குகின்றனர்.

உ. (வணக்கவழிபாடுகள் மற்றும் ஏனைய விடயங்களில் முஸ்லிம்கள் விடும்) அதிகமான தவறுகளுக்கு குற்றப்பரிகாரங்களாக அடிமைகளை இஸ்லாம் உரிமையிடுகினற்து.

**3.**ஹஜ் வணக்கத்திற்காக முஸ்லிம்கள் ஒரே இடத்தில் ஒரே நேரத்தில் ஒன்று கூடி ஒரே நிறத்தில் அமைந்த ஆடையை அணிந்து சமூக வேறுபாடுகளை கவனத்தில் கொள்ளாது ஹஜ் கடமைகளை நிறைவேற்றுகின்றனர். ஹஜ் கடமையை நிறைவேற்றுவதில் எவ்வித வேறுபாடுமின்றி பிணைந்து காணப்படுகின்றனர்.

இறைவழிப்பாட்டுக்காக முதலாவது நிறுவப்பட்ட பள்ளிவாசல் மக்காவிலுள்ள புனித ஆலயமாகும். இது மு.:.மின்களின் ஒருமைப்பாட்டுக்கான அடையாளமாகும். உலகின் பலபகுதிகளிலுமுள்ள

முஸ்லிம்கள் தொழுகையின் போது அந்தப் பள்ளிவாசலை (க.:.பாவை) முன்னோக்கி தொழுகிறார்கள். உலகின் பல்வேறுப்பட்ட பகுதிளிலிருந்தும் க.:.பாவை 13 முன்னோக்கி சூழ வட்டவடிமாக நின்று தொழுகையை நிறைவேற்றகின்றனர். மக்கா என்பது பூமியின் மையப்பகுதியாகும்

கடிகார முட்கள் இணைந்து சுற்றிவருவது போல், சூரியனைச் சுற்றி கோல்கள் அதன் வட்டத்தில் நகர்வது போல், அணுவைச் சுற்றி இலத்திரன்கள் வருவது போல், மனித உடலில் குருதிச்சுற்றோட்டம் நடைப்பெறுவது போல், வாழ்வியல் வட்டங்கள் இயற்கையை சுற்றி வருவது போல், முஸ்லிம்கள் அந்த ஆலயத்தை சுற்றி வருகிறார்கள்.

அடியார்களின் செயற்பாடு அவர்களைச் சுற்றி இருக்கும் இயற்கைகளுடன் எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதற்கு பல அத்தாட்சிகளை குர்ஆன் நமக்கு முன்வைக்கிறது. உதாரணமாக ‘‘(நிச்சயமாக நாம் தாவூதுக்கு நம்மிடமிருந்து அருளை வழங்கினோம். மலைகளே! பறவைகளே! அவருடன் சேர்ந்து துதியுங்கள் மேலும் நாம் அவருக்கு இரும்பை எளிதாக்கி கொடுத்தோம் (34:10)

இப்பிரபஞ்சத்திலுள்ள படைப்புகள் அல்லாஹ்வை துதித்து மகிமைப்படுத்துவதன் மூலம் முழுமையாகியுள்ளதென குர்ஆன் பல இடங்களில் உறுதிப்படுத்துகின்றது. பூமி தன்னை தானே சுற்றி வருவதினால் இரவும் பகலும் மாறிமாறி வருகின்றது. பூமியின் பல்வேறு பகுதியிலுள்ள முஸ்லிம்கள் மக்காவை நோக்கி ஒரு நாளைக்கு ஐவேளை தொழுகைகளை நிறைவேற்றுதன் மூலமும், க.:பாவை வலம் வருவதன் மூலமும் ஒன்றிணைகிறார்கள். மக்காவை முன்னோக்கி, தொடராக அல்லாஹ்வை துதிப்பது உலக ஒழுங்கின் ஒரு பகுதியாக முஸ்லிம்கள் காண்பிக்கிறார்கள்.

_ _ _ _ _ _ _ _ _ _

13. சங்கைமிக்க காபா என்பது சதுர வடிவிலான ஒரு கட்டடமாகும். அதன் அமைவிடம் (சவூதி அரேபியாவில்) மக்கா எனும் நகரத்தில், (சங்கை மிகுந்த அல் ஹரம் பள்ளிவாயலில்) நடுவே உள்ளது. அதற்கு (வெளிப்படையாக தென்படும்) ஒரு கதவு உண்டு, அதற்கு ஜன்னல் அமையப் பெற்றில்லை. அதனுள்ளே எதுவும் இல்லை. அது எவரது மன்னரையுமல்ல. அது தொழுகைக்காக அன்று அமைக்கப் பட்ட ஒரு அரையாகும். காபாவின் உள்ளே முஸ்லிமுக்கு எத் திசையில் வேண்டுமென்றாலும் தொழலாம். காபா வரலாற்று நெடுகிலும் பல தடவைகள் புனர்நிர்மாணம் செய்யப் பட்டுள்ளது. இறைத் தூதர் இப்ராஹீம் அவர்கள்தனது மகனாருடன் சேர்ந்து காபாவின் அஸ்திவாரத்தில் சுவர் எழுப்பினார்கள். காபாவின் ஒரு மூலையில் "ஹஜர் அல்-அஸ்வத்" எனும் ஒரு கல் அமையப் பெற்றுள்ளது. அது சாதாரண ஒரு கல்லாகும். அது முதல் மனிதன் ஆதம் அவர்களின் காலத்தில் இருந்து வருகிறது. முஸ்லிம்களின் ஒரு அடையாளாச் சின்னமாக அது திகழஞ்சு வருகிறது.

## 12. சுததந்திரமான மார்க்கம் இஸ்லாம்

- ### கொள்கையில் சுதந்திரமும் மார்க்கத்தில் தெரிவும்

இஸ்லாம் மனிதனுக்கு வழங்கிய மிக முக்கிய உரிமைகளில் ஒன்று தமக்குரிய நம்பிக்கையை அல்லது மார்க்கத்தை தெரிவு செய்யும் உரிமையாகும்.

இம்மார்கத்(தைத் தழுவுவ)தில் எவ்வித நிர்ப்பந்தமுமில்லை. வழிகேட்டிலிருந்து நேர்வழி மிகத் தெளிவாகி விட்டது. எவர் (அல்லாஹ் அல்லாது வணங்கப்படும்) தாகூத்தை நிராகரித்து அல்லாஹ்வை நம்பிக்கை கொள்கின்றாரோ அவர் நிச்சயமாக அறுந்து போகாத பலமான கயிற்றைப் பற்றிப் பிடித்துக் கொண்டவராவார். மேலும் அல்லாஹ் யாவற்றையும் செவியுறுபவனும் நன்கறிந்தவனுமாவான். (2:256)

- ### அடிமைத்துவத்தற்கு எதிரான போராட்டம்

இஸ்லாத்திற்கு முற்பட்ட காலங்களில் அடிமைத்துவம் மக்களால் நடைமுறை படுத்தப்பட்டு ஸ்திரமான ஒழுங்கமைப்பில் இருந்தது. அடிமைத்துவத்திற்கு எவ்வித கட்டுப்பாடும் இருக்க வில்லை. கடனை அடைக்க

முடியாதவர்கள் கடன் பெற்றவரிடம் தானாகவே முன்வந்து அடிமைகளாக மாறக்கூடிய வர்களாக இருந்தார்கள். போரில் கைதிகளாக பிடிக்கப்பட்டவர்கள் உடனடியாகவே அடிமைகளாக ஆக்கப்பட்டார்கள். சில நாடுகளிலும் பிரதேசங்களிலும் அடிமைகள் மிருகங்கள் போல் வேட்டையாடப்பட்டார்கள். அடிமைகள் வியாபாரப் பொருட்களாக விற்கப்பட்டும், வாங்கப்பட்டும் வந்தார்கள். ஆயிரக்கணக்கான மக்களின் வாழ்வாதாரமாக அடிமைகள் காணப்பட்டார்கள். அதிலும் குறிப்பாக பிரபுத்துவ வர்க்கத்தினரின் வாழ்வாதாரமாக அடிமைகள் காணப்பட்டார்கள். ஒரு குடும்பத்தின் பலமும் அந்தஸ்தும் செல்வத்தின் அடையாளமும் அக்குடும்பத்திலுள்ள அடிமைகளின் எண்ணிக்கையைப் பொருத்து கணிக்கப்பட்டது.

அடிமைத்துவத்திற்கு முடிவு கட்ட இஸ்லாம் தனது பலத்தை பிரயோகித்தது. அதனால் கோபத்திற்கும் பகைமைக்கும் இலக்காகியது.

அக்காலத்தில் அடிமை வியாபாரம் பொருளாதாரத்தில் பெரும் பங்கு வகித்ததனால் அடிமை ஒழிப்பு, பொருளாதார சரிவை ஏற்படுத்தியது.

அடிமைத்துவத்தற்கு எதிரான போராட்டம் முழுசமூகத்தின் சிந்தனையையும் பார்வையையும் மாற்றியது. சுதந்திரம் பெற்ற அடிமை சமூகத்தின் செயலாற்றமிக்க பூரணத்துவமிக்க முழுமை அடைந்த உறுப்பினராக மாறினான்.

அடிமையை உரிமையிடுவதில் ஆர்ப்பாட்டங்கள், வேலை நிறுத்தங்கள், சமூ எதிர்ப்புகள், இன புரட்சிகள் என்பனவற்றுக்கு எத்தேவையும் இருக்க வில்லை அடிமைத்துவம் உருவாகுவதை குறைப்பதற்கு இரத்தம் சிந்தவோ வாள் ஏந்தி போரிடவோ எந்த நிர்ப்பந்ததும் இஸ்லாத்திற்கு இருக்க விலலை. அதேநேரம் அடிமைத்துவம் எந்த தோற்றம் எடுத்தாலும் அதை இஸ்லாம் தடைசெய்கிறது.

**இஸ்லாத்தின் வருகைக்கு முன் அடிமைத்துவ முறைகள் :**

- போரில் பிடிக்கப்படும் கைதிகள் அடிமைகளாகப்படல்.
- ஆட்சியாளர் தனது அதிகாரத்தை பயன்படுத்தி குடிமக்களில் தான் நாடியவர்களை அடியமையாக்குதல்.

- தந்தை அல்லது பாட்டன் அல்லது குடும்பத்தில் அதிகாரமுள்ளவர் தனது குடும்பத்திலுள்ள ஒருவரை விற்றல் அல்லது அன்பளிப்பாக வழங்குதல் அல்லது தனது கடனுக்கு பதிலாக பிள்ளையை அடிமையாக கொடுத்துவிடுதல்.

கடைசியாக சொல்லப்பட்ட இரு வழிகளையும் இஸ்லாம் முற்றாக தடைசெய்தது. அதேவேளை ஆட்சியாளர்களுக்கான கடமைகள் உரிமைகளையும், குடிமக்களுக்கான கடமைகள் உரிமைகளை யும் சுதந்திரமான வரையறைக்கும் நீதிக்கும் உட்பட்டு இஸ்லாம் வழங்கியது.

போரின் போது பிடிக்கப்படும் கைதிகளை எதிரிகளுடன் பறிமாற்றிக் கொள்வதை இஸ்லாம் அனுமதித்தது அதே வேளை குற்றப் பரிகாரங்களுக்காக கைதிகளை படிப்படியாக விடுதலை செய்ய நடவடிக்கையும் எடுத்தது. அல்லாஹ்வின் நெருக்கத்தை பெறுவதற்காக அடிமைகளை உரிமையிடுவதன் மூலம் நன்மைக்கான வாசலை இஸ்லாம் திறந்து கொடுத்தது.

மேற்கத்தியவாதிகள் மக்களை அடிமைப்படுத்தி காலனித்துவவாதிகளாக வைத்துக்கொள்ள போர் தொடுத்தார்கள். இதுவே அவர்களது போரின்

அடிப்படை நோக்கமாகும். ஆனால் இஸ்லாம், தன்னுடைய செல்வம் உயிர் மற்றும் மார்க்கத்தை பாதுகாக்க மட்டுமே போருக்கு அனுமதி வழங்கியது.

முஸ்லிம்கள் போருக்காக நிர்ப்பந்திக்கப்பட்ட வேளை கைதிகளுடன் நல்ல முறையில் நடந்து கொள்ளுமாறு நபி (ஸல்) அவர்கள் தன் தோழர்களுக்கு கட்டளையிட்டார்கள். கைதிகள் தங்களது விடுதலைக்காக ஒரு தொகையை செலுத்துவதன் மூலம் அல்லது பிள்ளைகளுக்கும், எழுத வாசிக்கத் தெரியாதவர்களுக்கும் கற்றுக் கொடுப்பதன் மூலம் விடுதலையை பெற்றுக் கொள்ளும் படி கூறினார்கள்.

இஸ்லாத்தில் உள்ள குடும்ப விதிமுறைப்படி குழந்தையை தன் தாயிடமிருந்தோ, மனைவியை கணவனிடமிருந்தோ॰ சகோதரனை சகோதரியிடமிருநதோ பிரிக்கக் கூடாது (அடிமைகளும் இந்த சுதந்திரததை பெற்றுக் கொள்ளவே வழிகாட்டப்பட்டது.)

குற்றப்பரிகாரங்களுக்காக அடிமைகளை விடுதலை செய்வதை மார்க்கமாக்கியதன் மூலம் இஸ்லாம் அடிமைவிடுதலைக்கு பெரும் பங்காற்றியது. உதாரணமாக: எவ்வித காரணமுமின்றி ரமழானில் நோன்பை விடுபவர் ஒரு அடிமையை விடுதலை

செய்வதோடு அந்த நோன்பை வேறொரு நாளில் நோற்க வேண்டும்.

தவறுதலாக கொல்லப்பட்டதற்கு பரிகாரமாகவும்,

சத்தியதை முறித்தமைக்கு பரிகாரமாகவும்,

தன் மனைவியை தாய்க்கு ஒப்பிட்டமைக்கு பரிகாரமாகவும் ஒரு அடிமையை விடுதலை செய்வதை மார்க்கமாக்கியது.

அகிம்சை வழிமுறைகள் மூலமாக மோசமான வழிகளிலிருந்து விரைவாக விடுபடுவதே இஸ்லாத்தின் நோக்கமாகும்.

அடிமை பெண் தனது எஜமானுக்கு குழந்தையை பெற்றெடுத்த பின் விற்கப்படக் கூடாது. எஜமானின் மரணத்தோடு அவள் தானாகவே சுதந்தரம் அடைவாள் அவள் பெற்றெடுத்த குழந்தையும் சுதந்திரமானவான் என்பதே இஸ்லாத்தின் சட்டமாகும். ஆனால் இதற்கு மாற்றமாகவே முன்னைய கால மௌடீக கொள்கைகள் காணப்பட்டன.

ஒரு அடிமை குறிப்பிட்ட தொகையை எஜமானுக்கு வழங்குவதன் மூலம் அல்லது குறிப்பிட்ட காலம் வேலை செய்வதன் மூலம் விடுதலை பெறுவதை இஸ்லாம் மார்க்கமாக்கியது.

‘‘திருமணம் செய்ய வசதியற்றோர் அல்லாஹ் தனது அருளால் அவர்கைளச் செல்வந்தராக்கும் வரை கற்பொழுக்கத்துடன் இருந்து கொள்ளட்டும். உங்களது அடிமைகளிலிருந்து எவர்கள் உரிமைப் பத்திரம் (எழுதிக்) கேட்கிறார்களோ அவர்களிடம் நீங்கள் ஏதேனும் நன்மை அறிந்தால் அவர்களுக்கு எழுதிக் கொடுங்கள். அல்லாஹ் உங்களுக்கு வழங்கியிருக்கும் அவனது செல்வத்திலிருந்து அவர்களுக்கு நீங்கள் வழங்குங்கள். கற்பைப் பேண விரும்பும் உங்கள் அடிமைப் பெண்களை இவ்வுலகின் அற்பப் பொருளைப் பெறுவதற்காக விபச்சாரத்திற்கு நிர்ப்பந்திக்காதீர்கள். அவர்களை எவரேனும் நிர்ப்பந்தித்தால் அவர்கள் நிர்ப்பந்திக்கப்பட்ட பின்னர் நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவன். நிகரற்ற அன்புடையவன்.(24:33)

அடிமை தனது விடுதலைக்காக எஜமானுடன் ஒப்பந்தம் செய்து அதற்கு எஜமானும் இணங்கினால் அந்த அடிமையின் விடுதலைக்கு உதவி செய்திட வேண்டும் என்று இஸ்லாம் கூறுகிறது.

முஸ்லிம்களின் செல்வதிதிலிருந்து அல்லது அரசாங்கத்தின் செல்வத்திலிருந்து அடிமைகளை விடுதலை செய்திட இஸ்லாம் சட்டம் இயற்றியுள்ளது. நபி (ஸல்) அவர்களும், அவர்களது

தோழர்களும் பொது சொத்திலிருந்து அடிமைகளை விடுதலை செய்துள்ளார்கள்.

## 13. நீதியின் மார்க்கம் இஸ்லாம்

இஸ்லாம் நீதியின் அடிப்படையையும் மற்றவர்களின் உரிமைகளை பாதுகாப்பதையும் பலஇடங்களில் உறுதிசெய்துள்ளது. உரிமைகள் பால்படுத்தப்பட்டு நீதி மறுக்கப்படுவது குழப்பங்களுக்கான காரணம் என்றும் குறிப்பிடுகின்றது.

‘‘மத்யன் வாசிகளுக்கு அவர்களது சகோதரர் ஷுஐபை(த் தூதராக அனுப்பினோம்) அவர் எனது சமூகத்தினரே! அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள், அவனை யன்றி (உண்மையாக) வணங்கப்படத் தகுதியானவன் உங்களுக்கு (வேறுயாரும்) இல்லை. உங்கள் இரட்சகனிடமிருந்து தெளிவான சான்று நிச்சயமாக உங்களிடம் வந்து விட்டது. எனவே அளவையையும், நிறுவை யையும் முழுமையாக நிறைவேற்றுங்கள். மனிதர்களுக்கு அவர்களின் பொருட்களை குறைத்து விடாதீர்கள். பூமியில் சீர்திருத்தம் ஏற்பட்ட பின்னர் அதில் குழப்பம் விளைவிக்காதீர்கள். நீங்கள் நம்பிக்கையாளர்களாக இருந்தால் இது தான் உங்களுக்கு மிகச்சிறந்ததாகும் என கூறினார். (7:85)

‘‘நம்பிக்கைகொண்டோரே! அல்லாஹ்வுக்காக நீதியை நிலைத்திருத்துபவர்களாகவும் (அதற்கு) சாட்சியாளர்களாகவும் இருங்கள். ஒரு கூட்டத்தின் மீதுள்ள வெறுப்பு நீங்கள் நீதி செலுத்தாதிருக்க உங்களைத் தூண்டவேண்டாம். நீங்கள் நீதி செலுத்துங்கள். அதுவே பயபக்திக்கு மிக நெருக்கமானதாகும். மேலும் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிவான். (5:8)

‘‘அமானிதங்களை (நம்பி ஒப்படைக்கப்பட்ட பொருட்களை) அதற்குரியோரிடம் ஒப்படைத்து விடுமாறும் மனிதர்களுக்கிடையில் நீங்கள் தீர்ப்பளித்தால் நீதமாகத் தீர்ப்பளிக்குமாறும் நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு கட்டளையிடுகின்றான். நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு செய்யும் உபதேசம் மிகச் சிறந்ததாகும். நிச்சயமாக அல்லாஹ் நன்கு செவியுறுபவனும், பார்ப்பவனுமாக இருக்கிறான்.(4:58)

‘‘நிச்சயமாக அல்லாஹ் நீதியையும் உபகாரம் செய்வதையும் நெருங்கிய உறவினர்களுக்கு வழங்குவதையும் ஏவுகிறான். மேலும் மானக்கேடானவற்றை விட்டும்ஈ தீமையை விட்டும் வரம்பு மீறுவதை விட்டும் அவன் தடுக்கின்றான்.

நீங்கள் நல்லுபதேசம் பெறும் பொருட்டு உங்களுக்கு உபதேசம் செய்கின்றான். (16:90)

## 14.சமூக உரிமைகளை இஸ்லாம் பேணுதல்

- **அடுத்தவர்களை மதிப்பதும், அன்பு காட்டுவதும், நேசம் கொள்வதும் அடிப்படையாகக் கொண்டு சமூக கடமைகள்**

கட்டமைக்கப்படுவது அவசியமாகும் என இஸ்லாம் எமக்கு கற்றுத் தருகின்றது. இதற்கான விதிமுறைகளையும் கடமைகளையும் விதித்து சமூகத்துடன் இணைக்கின்ற தொடர்ப்புகளையும் உரிமைகளையும் வரையறுத்துள்ளது.

‘‘நம்பிக்கை கொண்டோரே! சபைகளில் இடம் அளியுங்கள் என உங்களுக்கு கூறப்பட்டால் நீங்கள் இடமளியுங்கள். அல்லாஹ்வும் உங்களுக்கு இடமளிப்பான. நீங்கள் எழுந்து விடுங்கள் என்று கூறப்பட்டால் உடனே எழுந்திடுங்கள். உங்களில் எவர்கள் நம்பிக்கைக் கொண்டு அறிவும் வழங்கப்பட்டுள்ளார்களோ அவர்களுக்கு அல்லாஹ் அந்தஸ்துகளை உயர்த்துவான். மேலும் நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன். (58: 11)

‘‘நம்பிக்கைக் கொண்டோரே! பெண்களை பலவந்தமாக நீங்கள் உரித்தாகிக் கொள்வது

உங்களுக்கு ஆகுமானதல்ல. அவர்கள் பகிரங்கமான ஏதேனும் மானக்கேடான செயலைச் செய்தாலேயன்றி அவர்களுடன் நீங்கள் வழங்கியவற்றில் சிலதை பறித்துக் கொள்வதற்காக அவர்களைத் துன்புறுத்தாதீர்கள். அவர்களுடன் நல்ல முறையில் வாழ்க்கை நடத்துங்கள். நீங்கள் அவர்களை வெறுத்தாலும் (பொறுத்துக் கொள்ளுங்கள்) ஏனெனில் நீங்கள் ஒன்றை வெறுக்க அல்லாஹ் அதில் அதிகமான நன்மைகளை வைத்திருக்கக் கூடும். (4:19)

நீங்கள் அல்லாஹ்வை வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள். இன்னும் பெற்றோர்கள், நெருங்கிய உறவினர்கள், அநாதைகள், வறியவர்கள், உறவினர்களான அயலவர்கள், அந்நிய அயலவர்கள், அருகிலுள்ள நண்பர், வழிப்போக்கர், உங்கள் அடிமைகள் ஆகியோர்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பெருமையடித்து கர்வம் கொள்வோரை நேசிக்கமாட்டான். (4:36)

‘‘அங்கு நீங்கள் எவரையும் பெற்றுக் கொள்ளவில்லையாயின் உங்களுக்கு அனுமதியளிக்கப்படும் வரை அதில் (வீட்டில்) நீங்கள் நுழைய வேண்டாம். நீங்கள் திரும்பி விடுங்கள் என்று உங்களுக்கு கூறப்பட்டால் திரும்பி

விடுங்கள் இதுவே உங்களுக்கு மிகப் பரிசுத்தமானதாகும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன். **(24: 28)**

"நம்பிக்கை கொண்டோரே! பாவி ஒருவன் உங்களிடம் ஏதேனும் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால் தெளிவு பெற்றுக் கொள்ளுங்கள். (ஏனெனில்) அறியாமையின் காரணமாக ஒரு கூட்டத்திற்கு நீங்கள் தீங்கிளைத்து விடுவீர்கள். அதனால் நீங்கள் செய்தவை குறித்து நீங்கள் கவலைக் கொண்டவர்களாக ஆகிவிடுவீர்கள் (49:6)

"நம்பிக்கையாளர்களில் ஒரு சாரார் தமக்கிடையே சண்டையிட்டுக் கொண்டால் அவர்களிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்துங்கள் அவர்களில் ஒரு சாரார் மற்றவர் மீது வரம்பு மீறினால் அல்லாஹ்வின் கட்டளையின் பால் திரும்பும் வரை வரம்பு மீறும் கூட்டத்துடன் போரிடுங்கள். அவர்கள் திரும்பி விட்டால் அவர்களிடையே நீதியைக் கொண்டு நல்லிணக்கத்தை ஏற்படுத்துங்கள். மேலும் நீதியாக நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துவோரை நேசிக்கின்றான்.(49:9)

"நம்பிக்கையாளர்கள் அனைவரும் சகோதரர்களே! எனவே உங்கள் இரு சகோதரர்களிடையே

நல்லிணக்கத்தை ஏற்படுத்துங்கள். நீங்கள் அருட்செய்யப்படும் பொருட்டு அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். (49:10)

நம்பிக்கைக் கொண்டோரே! ஒரு கூட்டத்தினர் மற்றொரு கூட்டததினரைப் பரிகாசம் செய்ய வேண்டாம். இவர்களை விட அவர்கள் சிறந்தவர்களாக இருக்கக்கூடும். எந்தப் பெண்களும் மற்ற எந்தப் பெண்களையும் (பரிகாசம் செய்ய வேண்டாம்) இவர்களை விட அவர்கள் சிறந்தவர்களாக இருக்கக்கூடும். உங்களுக்கிடையே நீங்கள் குறை கூறவேண்டாம். மேலும் பட்டப்பெயர்களால் அழைக்கவும் வேண்டாம். நம்பிக்கொண்ட பின் தீய பெயர்களை சூட்டுவது மிகக் கெட்டதாகும். எவர்கள் (இவற்றை விட்டும்) மீள வில்லையோ அவர்கள் தாம் அநியாயக்காரர்கள்.(49:11)

‘‘நம்பிக்கைக் கொண்டோரே! எண்ணங்களில் அதிகமானதை தவிர்த்துக் கொள்ளுங்கள் நிச்சயமாக எண்ணங்களில் சில பாவமாகும். மேலும் நீங்கள் துருவித்துருவி ஆராயாதீர்கள். இன்னும் உங்களில் சிலர் மற்றும் சிலரை புறம் பேசவும் வேண்டாம். உங்களில் எவரேனும் இறந்த தனது சகோதரரின் மாமிசத்தை உண்ண விரும்புவாரா? அதை நீங்கள் வெறுத்து விடுவீர்கள். மேலும் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக

அல்லாஹ் மிக்க மன்னிப்பவன் நிகரற்ற அன்புடையவன் (49:12)

தான் விரும்புவதை தன்சகோதரனுக்கு விரும்பாதவரை உங்களில் எவரும ஈமான் கொண்டவராக மாட்டார். என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அனஸ ் (ரலி), (நூல: புகாரி – 13)

- ## பெற்றோரை கண்ணியப்படுத்தல்

"உமது இரட்சகன் தன்னையன்றி (வேறு எவரையும்) நீங்கள் வணங்கக்கூடாது என்றும், பெற்றோருக்கு நன்மை செய்யுமாறும் கட்டளையிட்டுள்ளான். அவ்விருவரில் ஒருவரோ அல்லது அவ்விருவருமோ உம்மிடம் முதுமையை அடைந்து விட்டால் அவர்களை நோக்கி சீ எனக் கூறவோ அவ்விருவரையும் விரட்டவோ வேண்டாம். அவ்விருவருக்கும் மென்மையான வார்த்தையே கூறுவீராக.

கருணையுடன் பணிவு எனும் இரக்கையை அவ்விருவருக்காகவும் நீர் தாழ்த்து வீராக என் இரட்சகனே! சிறுவனாக இருந்த போது அவ்விருவரும் என்னை பராமரித்தது போன்று அவ்விருவருக்கும் நீ கருணை புரிவாயாக எனக் கூறுவீராக (17:23 – 24)

‘‘மனிதன் தனது பெற்றோருக்கு உபகாரம் செய்ய வேண்டும் என நாம் உபதேசித்தோம். அவனை அவனது தாய் சிரமத்துடனே சுமந்து சிரமத்துடனேயே அவனை பெற்றெடுத்தாள். அவனை (கர்ப்பத்தில்) சுமப்பதும் அவனுக்கு பால் மறக்கடிக்கச் செய்வதும் முப்பது மாதங்களாகும். அவன் தனது வாலிபத்தை முழுமையாக அடைந்து நாற்பதாவது வயதை அடைந்த போது என் இரட்சகனே! நீ எனக்கும், எனது பெற்றோருக்கும் செய்த அருட்கொடைகளுக்கு நான் நன்றி செலுத்துவதற்கும், நீ பொருந்திக் கொள்ளும் நல்லறத்தை நான் புரிவதற்கும் எனக்கு அருள்பாளிப்பாயாக. எனக்கு என் சந்ததியை சீர்படுத்துவாயாக நிச்சயமாக நான் உன்னிடம் பாவமன்னிப்புக் கோரி மீண்டு விட்டேன். நிச்சயமாக நான் முற்றிலும் வழிப்பட்டு முஸ்லிம்களில் உள்ளவனாவேன் என்று (பிரார்த்தித்துக்) கூறுவான். (46:15)

## • உறவினர்களின் உரிமைகள்

மேலும் உறவினர், வறியோர், வழிப்போகர் ஆகியோரின் உரிமையை வழங்குவீராக. நீர் விரயம் செய்யவேண்டாம். (17:26)

## • அண்டைவீட்டாரின் உரிமைகள்

“அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன், அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன், அல்லாஹ்வின் மீதாணையாக அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன், என்று (மூன்று முறை) இறைத் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவன் யார்? இறைத் தூதர் அவர்களே! என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் எவனுடைய நாசவேலைகளிலிருந்து அவனுடைய அண்டை வீட்டார் பாதுகாப்பு உணர்வைப் பெறவில்லையோ அவன்தான் என்று பதிலளித்தார்கள். அறிவிப்பவர: அபூ ஹுரைரஹ் (ரலி) ( நூல்: புகாரி 6016)

‘‘அயலவர் ஒருவர் தனது சொத்தை (காணியை) விற்கும் போது தனது (பக்கத்து வீட்டு) அயலவருக்கு விற்பதற்கு அதிக உரிமையுடையவராவார். அவர் ஊரில் இல்லாவிட்டாலும் அவர் வரும் வரை காத்திருந்து பிறகு தான் விற்க வேண்டும். இருவரின் வீட்டுப் பாதையும் ஒன்றாக இருக்கும் வரை தான் இந்த நிபந்தனை என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர: ஜாபிர (ரலி) நூால: அபூதாவுத்(3518)

அபூதர் அவர்களே! குழம்பை தயார் செய்தால் அதில் தண்ணீரை அதிகப்படுத்துவாயாக. அதனைக் கொண்டு உம்பக்கத்து வீட்டாரையும் கவனத்தில் கொள்வீராக. என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூதர் (ரலி) ( நூல்: முஸ்லிம் 2625)

தன்னிடமுள்ள நிலத்தை விற்க விரும்புபவர் தனது அண்டை வீட்டாரிடம் அந்நிலத்தைப் பற்றி (விற்கப்போவது குறித்து) பேசட்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) நூல: இப்னு மாஜா 2493)

- **அனாதைகளின் உரிமைகள்**

“எனவே அநாதையை நீர் கடிந்து கொள்ள வேண்டாம்.” (93:9)

‘‘இம்மைக்கும், மறுமைக்கும் பயன்தருபவற்றை (இவ்வாறு தெளிவுப்டுத்துகின்றான்) மேலும் அநாதைகள் குறித்தும் உம்மிடம் கேட்கின்றனர். அவர்களுக்குரிய சீர் திருத்தம் செய்வது நன்று! நீங்கள் அவர்களுடன் சேர்ந்து வாழ்ந்தால் (அவர்கள்) உங்கள் சகோதரர்களாவர். மேலும் சீர்திருத்தம் செய்பவனிலிருந்து குழப்பம்

விளைவிப்பவனை அல்லாஹ் நன்கறிவான். அல்லாஹ் நாடியிருந்தால் அவன் உங்களுக்குச் சிரமத்தை ஏற்படுத்தியிருப்பான். நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனும் ஞானமிக்கவனுமாவான் எனக் கூறுவீராக. (2:220)

‘‘(சொத்துப்) பங்கீட்டின் போது பங்குரிமையற்ற உறவினர்கள், அநாதைகள், ஏழைகள் என்போர் சமூகமளித்தால் அதிலிருந்து அவர்களுக்கும் (சிறிது) கொடுங்கள். இன்னும் அவர்களுக்கு நல்ல வார்த்தையையே கூறுங்கள். (4:8)

## • மிருகங்களின் உரிமைகள்

‘‘பூமியிலுள்ள உயிரினங்களும், தமது இரு இறக்கைகளால் பறக்கும் பறவைகளும் உங்களைப் போன்ற சமுதாயங்களே! (பாதுகாக்கப்பட்ட) பதிவேட்டில் எதையும் நாம் விட்டு வைக்க வில்லை பின்னர் அவர்கள் தமது இரட்சகனிடம் ஒன்று திரட்டப்படுவார்கள். (6:38)

(முன்னொரு சமுதாயத்தில்) பெண்ணொருத்தி ஒரு பூனை(க்குத் துன்பம் தந்த) விஷயத்தில் (நரகத்தில்) வேதனைப் படுத்தப் பட்டாள். அந்தப் பூனை பசியால் துடித்துச் சாகும் வரை அவள் அடைத்து வைத்திருந்தாள். அதன் காரணத்தால் அவள் நரகத்தில் புகுந்தாள். “நீ அதைக்

கட்டிவைத்து அதற்குத் தீனி போடவுமில்லை, தண்ணீர் தரவுமில்லை அது பூமியிலுள்ள புழு பூச்சிகளைத் தின்று (பிழைத்துக்) கொள்ளட்டும் என்று அதை அவிழ்த்து விடவுமில்லை. என்று அல்லாஹ் கூறினான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர: அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி, நூல: புகாரி 2365)

“ஒரு நாய் தாகத்தின் காரணமாக ஈர மண்ணை (நக்கி) சாப்பிடுவதை ஒருவர் பார்த்தார். உடனே அவர், தான் அணிந்திருந்த காலுறையை எடுத்து அதில் தண்ணீர் மொண்டு அந்நாய் தாகம் தீரும் வரை கொடுத்தார். எனவே அல்லாஹ் அம்மனிதருக்கு கருணைக் காட்டி அவரைச் சுவர்க்கத்தில் புகுத்தினான் என இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள: அறிவிபப்வர: அபூ ஹுரைரா(ரலி), நூல: புகரி 173)

அல்லாஹ் எல்லா விடயத்திலும் எளிய முறையை விதியாக்கியுள்ளான். நீங்கள் (மரணத்தண்டனைக்குரிய) ஒருவரை கொல்லும் போது எளிய முறையில் கொல்லுங்கள். ஒரு பிராணியை அறுக்கும் போதும் எளிய முறையில் அறுங்கள். அறுக்கும் முன் கத்தியை நன்கு கூராக்கிக் கொள்ளுங்கள். அறுக்கப்படும் பிராணியை ஆசுவாசப்படுத்துங்கள். 14 என நபி

(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூ ய.ஃலா ஷத்தாத் இப்னு அவ்ஸ் (ரலி), (நூல: முஸ்லிம் 3355)

_ _ _ _ _ _ _ _ _ _

14. எந்தவொரு மனிதனுக்கும் "ப்ரோடீன்" (புரதம்) எனும் சத்தை பெற்றுக்கொள்ள முடியுமான முக்கியமான ஒரு வழியே, மாமிச உணவுகள். மனிதனுக்கு தட்டையான மற்றும் கூர்மையான பற்கள் உள்ளன. இந்த இரண்டு பற்களும் கிழிப்பதற்கும் கடிப்பதற்கும் உதவும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளன. மேலும் மனிதர்கள் சதைகளையும் செடிகளையும் கடிக்குமாறு அல்லாஹ் பற்களைப் படைத்துள்ளான். செரிமான அமைப்பு தாவர பாகங்கள் மற்றும் விலங்குகளின் மாமிசங்கள் ஆகிய இரண்டும் செரிமானமாகும் விதத்தில் வடிவமைக்கப் பட்டுள்ளது.

## 15 – சூழலின் நவீன பிரச்சனைகளுக்கு இஸ்லாம் தீர்வு சொல்லுதல்

‘‘பூமியில் சீர்திருத்தம் ஏற்பட்ட பின் அதில் நீங்கள் குழப்பம் விளைவிக்காதீர்கள். அச்சத்தோடும் ஆசையோடும் அவனை அழையுங்கள். நிச்சயமாக அல்லாஹ்வின் கருணை நன்மை செய்வோருக்கு நெருக்கமாகவே இருக்கின்றது (7:56)

‘‘மனிதர்களின் கைகள் சம்பாதித்தவற்றின் காரணமாக தரையிலும் கடலிலும் குழப்பம் தோன்றி விட்டது. அவர்கள் மீளும் பொருட்டு அவர்கள் செய்தவற்றில் சிலதை அவர்களுக்கு சுவைக்கச் செய்வதற்காக (இவ்விதம் சோதிக்கின்றான்) (30:41)

## 16. போர் கைதிகளின் விடயத்தில் ஜெனீவா உடன்படிக்கையை விட இஸ்லாம் உயர்ந்து நிற்றல்

கைதிகளை நல்லமுறையில் நடாத்துமாறும், அவர்களுக்கான உணவு உடைகளை வழங்கிடுமாறும் நபி (ஸல்) அவர்கள் தன்தோழர்களுக்கு கட்டளையிட்டார்கள்.

‘‘இன்னும் அவர்கள் விரும்பும் உணவை அல்லாஹ்வுக்காக ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் கைதிகளுக்கும் வழங்குவார்கள். அல்லாஹ்வின் (சங்கைக்குரிய) முகத்திற்காகவே நாம் உங்களுக்கு

உணவளிக்கின்றோம். நாம் உங்களிடம் எந்த கூலியையோ, நன்றியையோ எதிர்பார்க்க வில்லை என்று கூறுவார்கள் (76:8 – 9)

சரணடைந்த போராளிகளுக்கு கருணை காட்டுமாறு இஸ்லாம் முஸ்லிம்களுக்கு ஏவுகின்றது

‘‘இணைவைப்பாளர்களில் எவரேனும் உம்மிடம் புகழிடம் கோரினால் அவர் அல்லாஹ்வின் வார்த்தையைச் செவியேற்கும் வரை அவருக்கு புகழிடம் அளிப்பீராக. பின்னர் அவருக்கு பாதுகாப்பான இடத்தில் அவரை சேர்த்து விடுவீராக நிச்சயமாக அவர் அறியாத கூட்டத்தினராக இருப்பதே இதற்குக் காரணமாகும். (9:6)

பெண்கள், சிறுவர்கள், தடுத்துவைக்கப்டடவர்கள், இயலாதவர்கள், துறவிகள், முதியவர்கள் ஆகியோரை கொலை செய்வதை இஸ்லாம் தடைசெய்கிறது. காரணம் இவர்கள் போராளிகள் அல்லர்.

## 17.இஸ்லாமிய நிதி முறைமை – பொருளாதார ஸதீரத்தன்மைக்கு உதவுதல்.

இஸ்லாமிய பொருளாதாரத்தின் நோக்கம் வணிகமாகும். மேலும் வியாபார பொருட்களையும், சேவைகளையும் பறிமாறிக் கொள்ளுவதுமாகும்.

பணம் சம்பாதிக்கும் நோக்கில் நாம் கடன் கொடுக்கிறோம். இதன் அடிப்படை நோக்கம் அபிவிருத்திக்கும் பொருள் மாற்றத்திற்கும் எமது செல்வததை முதலீடு செய்வதாகும்.

கடன்களுக்கு விதிக்கப்படும் வட்டி விகிதம் கடன் கொடுப்பவைர வட்டிக்கு தூண்டிக் கொண்டிருக்கிறது. அவர் வட்டிக்கு கொடுப்பதனால் எவ்வித நஷ்டமும் ஏற்பட போவதில்லை (கடன் எடுத்தவன் பாதிப்படைகிறான்)

கடனாளிகளிலிடமிருந்து பெறப்படும் வருடக்கணக்கிலான குவிந்த இலாபங்கள் காலப்போக்கில் ஏழை பணக்காரனுக்கிடையில் இடைவெளியை அதிகப்படுத்துகின்றது. அண்மைக் காலங்களில் அரசாகங்களும் நிறுவனங்களும் வட்டியை அடிப்படையாகக் கொண்டு விரிவானமுறையில் ஈடுப்பட்டது. இதன் காரணமாக சில நாடுகளில் பொருளாதாரம் வீழ்ச்சி அடைந்தமைக்கு பல உதாரணங்களை கண்ணுற்றோம்.

சமூகத்தில் குழப்பம் விளைவிப்பதில் ஏனைய குற்றச்செயல்களுக்கு இல்லாத பலம் வட்டிக்கு இருக்கிறது. **15**

‘‘நம்பிக்கை கொண்டோரே! பன்மடங்குகளாகப் பெருகும் வட்டியை நீங்கள் உண்ணாதீர்கள். நீங்கள் வெற்றி பெறும் பொருட்டு அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். (3:130)

‘‘மனிதர்களின் செல்வங்களுடன் (உங்கள் செல்வம்) பெருகுவதற்காக நீங்கள் வட்டிக்குக் கொடுத்தால் (அது) அல்லாஹ்விடம் பெருகமாட்டாது. அல்லாஹ்வின் (சங்கையான) முகத்தை நாடி நீங்கள் ஸகாத்தை கொடுத்தால் அத்தகையோர் தான் பன்மடங்காக பெருகிக் கொண்டோராவர். (30:39)

## 18 – செல்வத்தையும் ஆரோக்கியத்தையும் பேணுகிறது இஸ்லாம்

தன் படைப்புகள் மீது அல்லாஹ் கருணையும் இரக்கமும் கொண்டுள்ளான். நல்லவைகளை உண்ணுமாறும் கெட்டவைகளை உண்ணக்கூடாது எனவும் அல்லாஹ் எமக்கு கட்டளையிட்டான்.

‘‘அவர்கள் தான் (எழுத்தறிவற்ற) உம்மி நபியான இத்தூதரைப் பின்பற்றுவார்கள். அவர் குறித்து எழுதப்பட்டிருப்பதை தங்களிடமுள்ள தவ்ராத்திலும், இன்ஜீலிலும் கண்டு கொள்வார்கள். அவர் அவர்களுக்கு நன்மையை ஏவி தீமையை விட்டும் அவர்களைத் தடுப்பார்.

தூய்மையானவற்றை அவர்களுக்கு ஆகுமாக்கி தீயவற்றை அவர்களுக்குத் தடை செய்வார். **16** மேலும் அவர்களது சுமையையும் அவர்கள் மீதிருந்த விலங்குகளையும் அவர்களை விட்டும் நீக்குவார். எவர்கள் அவரை நம்பிக்கைக் கொண்டு அவரை கண்ணியப்படுத்தி அவருக்கு உதவியும் செய்து அவருடன் இறக்கப்பட்டிருக்கும் (குர்ஆன் எனும்) ஒளியையும் பின்பற்றுகிறாரோ அவர்கள்தாம் வெற்றியாளர்கள்.(7:157

‘‘நபியே! மது, **17** சூதாட்டம் குறித்து அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். அவ்விரண்டிலும் பெரும் கேடும் மனிதர்களுக்கு (சில) பயன்களும் இருக்கின்றன. எனினும் அவ்விண்டின் கேடு மிகப் பெரியதாகும் எனக் கூறுவீராக. மேலும் தாம் எதைச் செலவு செய்வது என்றும் உம்மிடம் கேட்கின்றனர். (தேவைக்குப்போக) மீதமுள்ளதை எனக்கூறுவீராக நீங்கள் சிந்திக்க வேண்டும் என்பதற்காக இவ்வாறே அல்லாஹ் வசனங்களை உங்களுக்கு தெளிவுப்படுத்துகிறான். (2:219)

நம்பிக்கை கொண்டோரே! மதுவும், சூதாட்டமும் (வணக்கத்திற்காக) நட்டப்பட்டவைகளும், குறிபார்க்கும் அம்புகளும் ஷைத்தானின் அருவருக்கத்தக்க செயலிலுள்ளவைகளாகும்.

எனவே நீங்கள் வெற்றி பெறும் பொருட்டு அதைத் தவிர்ந்துக் கொள்ளுங்கள். (5:90)

_ _ _ _ _ _ _ _ _ _

15. தோமஸ் அக்வினாயிஸ் (கிறிஸ்தவ மத அறிஞர் ஒருவர்) கிறித்தவத்தின் படி வட்டி என்பது கண்டிக்கப்பட வேண்டிய ஒன்று என்கிறார். இரண்டாம் நூற்றாண்டில் (கிறிஸ்தவ) மதத் தலைவர்கள் (ஒட்டுமொத்தமாக) தங்கள் சீடர்கள் மீது வட்டியைத் தடை செய்தனர். அதன் பின்னர் "திருச் சபையும்" வட்டியின் உலகளாவிய மற்றும் மத ரீதியான அடிப்படைகளை கவனத்தில் கொண்டு, வட்டியைத் தடை செய்தனர். "தோமஸ் அக்வினாய்ஸின்" கூற்றுப்படி; வட்டி மீதான தடைக்கு வழிவகுத்த காரணிகளில் நின்றும் உள்ளவைகள் தான்; * கடன் வழங்குபவர் வழங்கும் கால அவகாசத்துக்கே வட்டியிடப் படுகிறது. அது ஒருபோதும் நியாயமாகாது. * மேலும் அவ்வாறு (வட்டி கொடுக்கல் வாங்களை ஒரு வியாபாரமாகவே பார்க்கின்றனர். எனினும், தத்துவஞானி "அரிஸ்டாட்டில்" : பணம் என்பது பரிமாற்றத்துக்கு உரிய ஒரு சாதனமே அன்றி, அதனூடாக சம்பாதிப்பதற்கு அல்ல, என்கிறார். இது பணக்காரர்களாலும், ஏழைகளாலும் சமூகத்தில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டாலும், வட்டி பற்றிய பிளேட்டோவின் பார்வை "அது ஒரு சுரண்டலாகும்." என்பதே, கிரேக்கர்களின் காலத்தில், வட்டி தலைவிரித்தாடியது. அதன் போது, கடனாளி கடனைத் திருப்பிச் செலுத்த முடியாவிட்டால், கடன் கொடுத்தவர் அவரை சந்தைக்கு அழைத்துச் சென்று விற்றுவிடுவார். இதில், ரோமானியர்களுக்கும் அதிக வித்தியாசம் இருக்கவில்லை. இக் காரணிகளையெல்லாம் உற்றுநோக்கும் போது வட்டி தடை செய்யப் பட்டிருப்பது மதத்தின் பெயரால் மாத்திரமல்ல, என்பதை நன்றாக விளங்கி கொள்ளலாம். கிறிஸ்தவத்தின் வருகைக்கு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பே இந்த வட்டி தடைசெய்யப்பட்ட ஒன்றாகவே காணப் பட்டது. இந்த வட்டி, பைபிளிலும், அதற்கு முன்னதாக அருளப் பட்ட "தவுறாத்"திலும், தடை செய்யப் பட்ட ஒன்றாகவே காணப் படுகிறது.

16. பன்றி ஒரு அசுத்தமான விலங்கு. அதன் மாமிசம் மனிதர்களுக்கு தீங்கு விளைவிக்கின்றது. அது அசுத்தத்தில் வாழ்கிறது. இயற்கையாகவே, நேர்த்தியான மனிதன் அதை நெருங்குவதையோ, அல்லது அதைத் தொடுவதையோ கூட வெறுக்கிறான். அதை உண்பவர் சமநிலையற்றவர் அல்ல என்பதற்கும் இதுவே நல்ல சான்றாகும். பன்றிகளின் நவீன

அறிவியல் பல உண்மைகளை உறுதிப்படுத்தியுள்ளது. அவற்றில், பன்றி இறைச்சியில் அதிக கொழுப்பு உள்ளது மற்றும் இதர உணவுகளில் காணப்படும் கொழுப்புகள் மற்றும் அமிலங்களுடன் ஒப்பிடும்போது கொழுப்புகள் மற்றும் அமிலங்களில் அதிக செறிவு உள்ளது. பெருங்குடல், மலக்குடல் மற்றும் புரோஸ்டேட் புற்றுநோய்க்கு பங்களிக்கிறது. அதன் இரத்தம் உடல் பருமனுக்கு வழிவகுக்கிறது மற்றும் சிகிச்சையளிப்பது கடினம்.

17. மது அருந்துதல் ஒரு நபர் சுயநினைவை இழக்க வழிவகுக்கும். இது மனித நடத்தையையும் அசாதாரணமாக்குகிறது. அவனுடைய தீமைகள் அவனுக்கு எண்ணிலடங்கா எதிரிகளை உருவாக்கும். அவர்கள் தங்கள் அண்டை வீட்டாரையும் தங்கள் நண்பர்களையும் கூட கொலை செய்யும் நிலையை உருவாக்கும். அதே போல் சூதாட்டமும் கூட, அதில் ஈடுபடுபவர்களிடையே பகையை உண்டாக்கும்.

## 19 – பெண்ணுரிமைகள் விடயத்தில் ஐ.நா. சபையை முந்திவிட்டது இஸ்லாம்

ஒரு முஸ்லிம் பெண் ஐ.நா சபையிடம் தனது உரிமைகளை கேட்டு விண்ணப்பித்தாலோ, அல்லது அவளுக்கு இஸ்லாம் வழங்கிய உரிமைகளை விட்டுக் கொடுத்தாலோ, அது அவளுக்கு ஏற்படும் நஷ்டமாகும் என்பதை அதிகமானவர்கள் அறியமாட்டார்கள். ஏனனில் அதிகமான உரிமைகளை இஸ்லாத்தில் அவள் அனுபவிக்கிறாள். இஸ்லாத்தின் வருகைக்கு முன் அவள் ஒரு வியாபார பண்டமாக பயன்படுத்தப்பட்டாள், திருமணதிற்கு அவளது சம்மதம் பெறப்படமாட்டாது, அவளது எந்த உணர்வுகளுக்கும் மதிப்பளிக்கப்படமாட்டாது.

இன்றைய காலத்தில் ஆண் செய்யக்கூடிய எல்லா வேலைகளையும் தன்னால் செய்ய முடியும் என்பதை உறுதி செய்வதற்கு பெண் முயற்ச்சி செய்கிறாள். உண்மையில் பெண், தனித்துவத்தை இழந்து தனது சிறப்பம்சங்களையும் இழந்து நிற்கிறாள். ஆண் செய்ய முடியாத பல காரியங்களை செய்வதற்கு பெண்ணை அல்லாஹ் படைத்திருக்கின்றான். தாய்மையை அடைவது, இயற்கையான முறையில் பாலூட்டுவது, குழந்தைகளை பராமரிப்பது, என்று பல விடயங்கள் உண்டு. இஸ்லாம் கூறும் வணக்க வழிபாடுகளை

மேற்கொள்வதில் ஆணும் பெண்ணும் அல்லாஹ்வுக்கு முன் சமமானவர்கள்.

பெண் குழந்தைகளை உயிருடன் புதைப்பது என்ற பண்டைய அரேபியகலாசாரத்திலிருந்து அவளை பாதுகாத்து அவளை சிறப்பானவளாக ஆக்கியது இஸ்லாம். அவளை தனித்துவமான ஆளுமைகளுடைய பெண்ணாக ஆக்கியது. ஆணுக்கும் பெண்ணுக்குமுரிய இருதரப்பு உடன்படிக்கை விவகாரங்களை ஒழுங்குப்படுத்திக் கொடுத்தது. திருமணத்தின் போது மஹர் எனும் திருமண நன்கொடையை கணவனிடமிருந்து பெறும் உரிமையை பாதகாத்தது, அனந்தரச் சொத்தில் அவளுக்குள்ள உரிமைகளை உத்தரவாதப்டுத்தியது. தனது பிரத்தியேகமான சொத்துக்களையும், செல்வங்களையும் தானே நிர்வகிக்கத்தல் என்ற உரிமைகளை இஸ்லாம் அவளுக்கு வழங்கியது.

இஸ்லாம் வருவதற்கு முன்பு அனந்தரச் சொத்திலிருந்து அவள் தடுக்கப்பட்டாள். இஸ்லாம் வந்ததன் பின் அனந்தரச் சொத்தில் அவளை உள்வாங்கியது இன்னும் சொல்லப்போனல் 30கும் அதிகமான சந்தரப்பங்களில் ஆணை விட அதிகமான பங்குகளுக்கு உரித்துடையவளாகுகிறாள். அதே நேரம்

பெண்ணை விட ஒரு ஆண் 4 சந்தர்ப்பங்களில் மாத்திரமே கூடுதலாக பெறுகிறான்.

தந்தை விட்டுச் செல்லும் சொத்தில் ஆணுக்கு பங்கு இருப்பது போல் அவளுக்கும் பங்கு கிடைக்கின்றது. கணவனின் சொத்திலிருந்து அவளுக்கும் அவளது பிள்ளைக்கும் பங்கு கிடைக்கின்றது. 18 கணவனால் தலாக் சொல்லப்பட்ட போதும் கணவனது மரணத்தின போதும் அவள் கணவனின் வீட்டில் தங்கவைக்கப்பட்டு பராமரிக்கப்படுவாள். அவளுக்கும் அவளது குழந்கைளுக்கும் நிதி உதவி வழங்கி கவனிக்கப்படுவாள்.

முதல் மனிதர் ஆதமின் தவறுகளுக்கு அவரது மணைவி ஹவ்வா தான் பொறுப்பு என்பதற்கு எந்தவொரு செய்தியும் குர்ஆனில் காணமுடியாது. இதற்கு மாற்றமாக ஆதம்தான் பாவத்திற்கு முழுக்காரணம் என்ற செய்தியை காணமுடியும். தான் புரிந்த பாவங்களுக்கு ஆதம் (அலை) அல்லாஹ்விடமிருந்து வார்த்தைகளை பெற்று பாவமன்னிப்புக் கோரினார் என்று குர்ஆன் கூறுகிறது.

''நீங்கள் அனைவரும் இதிலிருந்து இறங்கி விடுங்கள் என்னிடமிருந்து நிச்சயமாக உங்களுக்கு நேர்வழி வரும் அப்போது என்னுடைய நேர்வழியை

யார் பின்பற்றுகின்றாரோ அவருக்கு யாதொரு பயமுமில்லை, அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள் என்று கூறினோம்.(2:38)

(ஆதாம்) ஆதம் (அலை) அவர்களின் பாவத்தைக் காணரம் காட்டி எந்த பாவத்தையும் பெண்கள் மீது இஸ்லாம் சுமத்த வில்லை. மாறாக பெண்ணின் அந்தஸ்தை உயர்த்துவதில் ஆர்வம் கொண்டது.

_ _ _ _ _ _ _ _ _ _

18. ஒரு ஆண் மற்றும் ஒரு பெண் பிள்ளையை விட்டு விட்டு ஒருவர் மரணித்தால், ஆண் (மகன்) பெண்ணை (மகள்) விட ஒரு மடங்கு அதிகமாக (அனந்தரத்தை) பெறுகின்றான். எனினும் ஆண் (மகனோ) தனக்கு கீழால் உள்ள மனைவி (மக்கள்) மீது செலவழிப்பது அவனுக்கு விதியாக்கப் பட்டுள்ளது. இன்னும் ஒரு பக்கத்தால் பார்க்கும் போது, பெண் தனது கணவனின் வழியாகவும் (அனந்தரத்தை) பெறுகிறாள். அதே போன்று, அந்தப் பெண் பெற்றுக்கொள்ளும் தனது பங்குகள் அவளுடைய தனியார் உடமைகளாகும். அவளின் விருப்பப் படி அந்த சொத்தை அவளால் உபயோகிக்க / பயன்படுத்த முடியும். எதிர் காலத்தில் அதை எப்படிப் பட்ட (நல்ல) தேவைகள், அவசரத் தேவைகள் ஆகிய எதற்கும் அதை (அவளின் விருப்பத்தின் அடிப்படையில்) வழங்கிட முடியும்.

‘‘இறை விசுவாசிகளில், நம்பிக்கையால் முழுமைப் பெற்றவரே அழகிய குணமிக்கவர் ஆவார். உங்களில் சிறந்தவர் மனைவியரிடம் சிறந்தவர் ஆவார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர: அபூஹுரைரா (ரலி), (நூல: திர்மிதி 1162)

‘‘நிச்சயமாக முஸ்லிமான ஆண்களும், முஸ்லிமான பெண்களும், நம்பிக்கையாளர்களான ஆண்களும், நம்பிக்கையாளர்களான பெண்களும், அடிபணிந்து வழிப்படும் ஆண்களும், அடிபணிந்து வழிப்படும் பெண்களும, உண்மையாளர்களான ஆண்களும், உண்மையாளர்களான பெண்களும், பொறுமையாளர்களான ஆண்களும், பொறுமையாளர்களான பெண்களும், உள்ளச்சமுடைய ஆண்களும், உள்ளச்சமுடைய பெண்களும், தர்மம் செய்யும் ஆண்களும் தர்மம் செய்யும் பெண்களும், நோன்பு நோற்கும் ஆண்களும், நோன்பு நோற்கும் பெண்களும், தமது கற்பை பாதுகாக்கும் ஆண்களும் தமது கற்பை பாதுகாக்கும் பெண்களும், அல்லாஹ்வை அதிகம் நினைவு கூரும் ஆண்களும், நினைவு கூரும் பெண்களும், ஆகியோருக்கு அல்லாஹ் மன்னிப்பையும் மகத்தான கூலியையும் தயார் செய்துவைத்துள்ளான். (33:35)

‘‘நம்பிக்கைக் கொண்டோரே! பெண்களை பலவந்தமாக உரித்தாக்கிக் கொள்வது உங்களுக்கு ஆகுமானதல்ல. அவர்கள் பகிரங்கமான ஏதேனும் மானக்கேடான செயலைச் செய்தாலேயன்றி அவர்களுக்கு நீங்கள் வழங்கியவற்றில் சிலதைப் பறித்துக் கொள்வதற்காக அவர்களைத் துன்புறுத்தாதீர்கள். அவர்களுடன் நல்லமுறையில் வாழ்க்கை நடாத்துங்கள். நீங்கள் அவர்களை வெறுத்தாலும் (பொறுத்துக் கொள்ளுங்கள்) ஏனெனில் நீங்கள் ஒன்றை வெறுக்க அல்லாஹ் அதில் அதிகமான நன்மைகளை வைத்திருக்கக்கூடும் (4:19)

‘‘மனிதர்களே! உங்களை ஒரே ஆன்மாவிலிருந்து படைத்த உங்கள் இரட்சகனை அஞ்சிக் கொள்ளுங்கள். அவன் அதிலிருந்து அதன் துணைவியைப் படைத்து, அவையிரண்டிலிருந்தும் அதிகமான ஆண்களையும், அதிகமான பெண்களையும் பரவச் செய்தான். எவனைக் கொண்டு நீங்கள் ஒருவர் மற்றவரிடம் (உரிமைகளைக்) கேட்டு கொள்வீர்களோ அந்த அல்லாஹ்வையும் மேலும் இரத்த உறவுகளை (த்துண்டித்து நடப்பதை)யும் அஞ்சிக்கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் உங்களை கண்கானிப்பவனாக இருக்கின்றான். (4:1)

‘‘ஆணோ அல்லது பெண்ணோ நம்பிக்கைக் கொண்ட நிலையில் நல்லறம் புரிந்தால் அவருக்கு நல்வாழ்வு அளிப்போம். அவர்கள் செய்து கொண்டிருந்த நல்லவற்றிக்காக அவர்களது கூலியை நிச்சயமாக நாம் அவர்களுக்கு வழங்குவோம்(16:97)

‘‘நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவும் அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும் இருக்கிறார்கள். (2:187)

‘‘நீங்கள் மனைவியரிடம் அமைதி பெறுவதற்காக உங்களில் இருந்தே உங்களுக்காக அவன் அவர்களைப் படைத்திருப்பதும், மேலும் அவன் உங்களுக்கிடையே அன்பையும் இரக்கத்தையும் ஏற்படுத்தியிருப்பதும் அவனது அத்தாட்சிகளில் உள்ளவையாகும். நிச்சயமாக இதில் சிந்திக்கும் சமூகத்திற்கு பலஅத்தாட்சிகள் இருக்கின்றன. (30:21)

‘‘நபியே பெண்கள் விடயத்தில் அவர்கள் மார்க்கத்தீர்பு கேட்கின்றனர். அவர்கள் விடயத்திலும், அநாதை, பெண்களுக்கு விதிக்கப்பட்டதை நீங்கள் அவர்களுக்கு வழங்காது அவர்களை மணந்து கொள்ளும் விடயத்திலும், பலவீனமாக்கப்பட்ட சிறுவர்கள் விடயத்திலும், அநாதைகள் விடயத்தில் நீதியை நிலைநாட்டுவது குறித்தும், இவ்வேதத்தில்

உங்களுக்கு ஓதிக்காட்டப் படுபவற்றிலும் அல்லாஹ் உங்களுக்குத் தீர்பளிப்பான் என்று நபியே நீர் கூறுவீராக. நீங்கள் நன்மையில் எதைச் செய்தாலும் நிச்சயமாக அல்லாஹ் அதை நன்கு அறிந்தவானாக இருக்கின்றான்.

ஒரு பெண் தனது கணவரிடம் மாறுபாட்டை அல்லது புறக்கனிப்பை அஞ்சினால் அவ்விருவரும் தமக்கிடையே நல்லிணக்கம் செய்து கொள்வது அவர்கள் மீது குற்றமில்லை. நல்லிணக்கமே சிறந்ததாகும். ஆத்மாக்கள் கஞ்சத்தனத்துக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. நீங்கள் தாராளத்தன்மையுடன் நடந்து (அல்லாஹ்வையும்) அஞ்சி நடந்தால் நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவனாக இருக்கின்றான். (4:127 – 128)

மனைவியர்களுக்கு செலவு செய்யுமாறும், அவர்களது செல்வங்களை பாதுகாக்குமாறும், குடும்ப பொறுப்பில் எந்தவொரு நிதிக் கட்டுப்பாடும் மனைவியைச் சாராது என்றும் அல்லாஹ் கணவன்களுக்கு கட்டளையிடுகிறான். மணம் முடித்த பின்பும் அவளது குடும்பத்தின் பெயரை பாதுகாக்க அவளுக்கு அனுமதித்தவாறே அவளது ஆளுமையையும் அவளது உயர்குணாதியங்களையும் இஸ்லாம் பாதுகாக்கின்றது.

விவாகரத்தை இஸ்லாம் அனுமதித்தாலும் விருப்புடன் அதை அனுமதிக்க வில்லை. திருமணம் என்பது கணவன் மனைவிக்கிடையில் அமைந்த உறுதியான உடன்படிக்கையும் பிணைப்புமாகும். கணவன் மனைவி இணக்கத்துடன் வாழ முடியவில்லை என்றால் விவாகரத்துக்கான முடிவை எடுக்க முன் அவசியமான மூன்று நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு கூறுகிறது.

1. அறிவுறுத்தல்.

2. நடுவர்களை அமைத்து தீர்வு காணல்.

3. உள்ளங்கள் அமைதிகாணும் வகையில் குறிப்பிட்ட காலம் எதிர்பார்த்திருத்தல்.

‘‘இன்னும் அவ்விருவருக்குமிடையில் பிளவை நீங்கள் அஞ்சினால் அவனது குடும்பத்திலிருந்து ஒரு நடுவரையும், அவளது குடும்பத்திலிருந்து ஒரு நடுவரையும் (சமாதானம் செய்ய) அனுப்புங்கள். இவ்விருவரும் (அவர்களுக்குள்) நல்லிணக்கத்தை விரும்பினால் அல்லாஹ் அவ்விருவருக்குமிடையில் இணக்கத்தை ஏற்படுத்துவான். நிசச்யமாக அல்லாஹ் நன்கறிந்தவனாகவும், மிக நுட்பமானவனாகவும் இருக்கின்றான். (4:35)

குர்ஆனில் சொல்லப்பட்ட ஒரே ஒரு பெண்ணின் பெயர் ஈஸா (அலை) அவர்களின் தாயார் மர்யம்

(அலை) அவர்கள் ஆவர். அது போல் குர்ஆனில் சொல்லப்பட்ட அதிகமான வரலாற்று சம்பவங்களில் பெரும் பங்கு வகித்த ஸபா நாட்டின் அரசி பற்றியும் சுலைமான் நபியின் வரலாற்றுடன் பேசப்படுகின்றது. இறுதியில் அவ்வரசியும் இறைநம்பிக்கைக் கொண்டு அல்லாஹ்வுக்கு கட்டுப்பட்ட முஸ்லிமானாள்.

‘‘அவர்களை ஆட்சி செய்யும் ஒரு பெண்ணை நிச்சயமாக நான் கண்டேன். அவள் (தேவையான) அனைத்துப பொருட்களும் வழங்கப்பட்டுள்ளாள். மேலும் அவளுக்கு மகத்தானதொரு சிம்மாசனமும் உள்ளது (27:23)

நபி (ஸல்) அவர்கள் தங்கள் மனைவியர்களுடன் கலந்தாலோசனை செய்து அவர்களது கருத்துக்களை ஏற்றுக் கொண்டுள்ளார்கள். ஆண்களைப் போல் பெண்களும் பள்ளிவாசலுக்கு வருவதற்கும், யுத்த களத்தில் கலந்து கொண்டு நோயாளிகளுக்கும், காயப்பட்டவர்களுக்கும் சிகிச்கை அளிப்பதற்கும் வியாபாரத்தில் கொடுக்கல் வாங்கல் செய்வதற்கும் கல்வி அறிவு துறையில் போட்டிப் போடுவதற்கும் அனுமதி வழங்கினார்கள் என்பதை இஸ்லாமிய வரலாறு எமக்கு தெளிவுப்படுத்துகின்றது.

இஸ்லாம் 1400 வருடங்களுக்கு முன்பே பெண்களுக்கு வாக்களிக்கும் உரிமையையும் கருத்துச் சுதந்திரத்தையும் வழங்கியது.

மேற்கத்திய பெண்கள் கடந்த நூற்றாண்டில் தான் இந்த உரிமையை பெற்றார்கள். பாதையில் இறங்கி பல துன்பங்களை அனுபவித்து பல கோரிக்கைகளை முன்வைத்த பின்னரே பெற்றார்கள்.

அது போல் பலதார மணத்தை இஸ்லாம் அனுதித்தது கட்டாயம் என்ற அடிப்படையில் அல்ல. அது விதிவிலக்கு அளிக்கப்பட்ட ஒன்றாகும். ஒரு முஸ்லிம் ஒன்றுக்கு மேற்பட்ட திருமணங்களை மேற்கொள்ள நிர்பந்திக்கப்படுகிறான் என சிலர் நினைப்பது தவறாகும்.

அல்குர்ஆன் இப்படி கூறுகிறது:

‘‘அநாதை(களை மணம் முடித்தால் அவர்) கள் விடயத்தில் நீதியாக நடக்க முடியாது என நீங்கள் அஞ்சினால் பெண்களில் உங்களுக்கு விருப்பமானவர்களில் இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நன் நான்காக, மணம் முடியுங்கள். நீங்கள் (இவர்களுக்கிடையில்) நீதமாக நடக்க முடியாது என அஞ்சினால் ஒருத்தியை அல்லது உங்கள் அடிமைப் பெண்களை (போதுமாக்கிக்

கொள்ளுங்கள்) நீங்கள் அநீதியிழைக்காமலிருக்க இதுவே மிக நெருக்கமானதாகும். (4:3)

பலதார திருமணத்தின் ஊடாக நீதியான முறையில் நடக்க முடியாது எனும் போது ஒரு மனைவியுடன் வாழவேண்டும் என்று உலகில் வலியுறுத்தும் ஒரே ஒரு மார்க்க நூல் அல்குர்ஆன் ஆகும்.

இஸ்லாத்திற்கு முன்பு பலதார மணத்திற்கு எந்த வரையறையும் இருக்க வில்லை. அதிகமான ஆண்கள் பத்து பெண்களை மணந்து கொண்டார்கள். சிலர் நூறுவரைக்கும் சென்றார்கள். இஸ்லாம் நான்கு வரை மணம் முடிக்க வரையறை செய்தது. பொருளாதார வசதி, நீதமாக நடத்தல் என்ற நிபந்தனைகளை பூர்த்தி செய்யமுடியுமாக இருந்தால் மட்டுமே இந்த அனுமதி வழங்கப்பட்டது இது இலகுவாக செய்யக்கூடிய விடயமல்ல.

‘‘மனைவியர்களுடன் நீதமாக நடக்க நீங்கள் எவ்வளவு தான் விரும்பினாலும் உங்களால் முடியாது. எனினும் நீங்கள் (ஒருத்தியின் பக்கம்) முழுமையாகச் சாய்ந்து அடுத்தவளை (அந்தரத்தில்) தொங்க விடப்பட்டவள் போல் விட்டு விடாதீர் கள். நீங்கள் உங்களைச் சீர் செய்து அல்லாஹ்வை அஞ்சி நடந்தால் நிச்சயமாக

அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும், நிகரற்ற அன்புடையவானகவும் இருக்கிறான். (4:129)

இயற்கையியல் சட்டத்தின் பிரகாரம் கிட்டத்தட்ட ஆணும் பெண்ணும் ஒரே விகிதாசாரத்தில் பிறக்கின்றனர். அறிவியலின் பிரகாரம் பெண்களின் ஆயுட்காலம் ஆண்களின் ஆயுட்காலத்தை விட மிக அதிகமாகும் என அறிய முடிகிறன்றது.

போரில் கொள்ளப்படும் பெண்களை விட ஆண்களே அதிகம். நடுத்தர வயதுடைய பெண்கள், நடுத்தர வயதுடைய ஆண்களை விட அதிகம் என அறிவியல்ரீதியாக அறிய முடிகிறது. அதனால் உலகில் (ஆண் விதவைகள்) தபுதார்களின் விகிதாசாரத்தை விட பெண் விதவைகளின் விகிதாசாரம் அதிகம்.

உலகில் ஆண்களின் தொகையை விட பெண்களின் தொகை அதிகம் என்ற முடிவுக்கு நாம் வரலாம். எனவே ஒரு ஆண் ஒரு பெண்ணை மணமுடிக்கவேண்டும் என வரையரை செய்வது செயல் ரீதியாக பொருத்தமானதல்ல .

பலதாரம் மணம் தடைசெய்யப்பட்ட சமூகங்களில் வாழும் ஆண்களிடத்தில் திருமணத்திற்கு அப்பால் பட்ட தவறான தொடர்புகள் ஆசை நாயகிகள் இருப்பதை பரவலாக அறியமுடியும். இந்நிலையில் அவனது ஆசை நாயகியும் அவளது பிள்ளைகளும்

எந்த உரிமையும் பாதுகாப்பும் இல்லாது அவமானமாக வாழ்கின்றனர்.

ஆச்சரியம் என்னவெனில் ஓரினைச் சேர்க்கை திருமணம் உட்பட திரு மணமத்திற்கு அப்பால் பட்ட தொடர்ப்புகளை பேணுவது பற்றி எந்த பிரச்சனையும் இந்த சமூகங்களில் இல்லை. தகப்பன் இல்லாத பிள்ளைகளை ஏற்றுக் கொள்வதிலும் எப்பிரச்சனையுமில்லை. ஆனால் ஒரு ஆண் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்ணை மணம் முடித்து சட்டப்பூர்வமான கணவனாக இருக்க அனுமதி மறுக்கிறார்கள். பெண்ணின் கண்ணியத்தையும் உரிமைகளையும் பாதுகாத்திட பலதார திருமணத்தின் மூலம் இஸ்லாம் தெளிவான தீர்வை முன்வைக்கிறது.

திருமணம் முடிப்பதற்கு மணம்முடிக்காத ஒருவரை ஒரு பெண் பெற்றுக் கொள்ளவில்லையென்றால், மணம்முடித்தவனை அவள் திருமணம் செய்ய வேண்டும் அல்லது ஆசைநாயகியாக (வப்பாட்டியாக) இருக்க நிர்பந்திக்கவேண்டும். இது தவிர அவளுக்கு முன்னால் வேறு தீர்வு இல்லை.

தன் கணவன் தனக்கு மட்டுமே கணவனாக இருக்க வேண்டும் என மனைவி திருமணத்தின் போது நிபந்தனை விதித்து ஒப்பந்தம் செய்தால்

அந்த ஒப்பந்தத்தை கடைப்பிடிப்பது அவசியமாகும். அதனை முறிக்கக் கூடாது.

இந்த நவீன சமூகத்தில் பெரும் பாலும் கவனிக்கப்படாமல் உள்ள முக்கிய விடயங்களில் ஒன்று என்னவென்றால் ஆண்களுக்கு வழங்காத உரிமைகளை பெண்களுக்கு இஸ்லாம் வழங்கியுள்ளது என்ற செய்தியாகும்.

ஆண் திருமணமாகாத பெண்களை மட்டும் மணம் முடிக்கிறான். பெண் மணம் முடித்த ஆணை அல்லது மணம் முடிக்காத ஆணை திருமணம் முடிக்கிறாள். இதன் போது அவள் பெற்றெடுத்த குழந்தைக்கு உண்மையான தந்தை யார் என்று உறுதி செய்வதோடு குழந்தைகளின் உரிமைகளையும் அவர்களது அனந்தரச் சொத்துக்களையும் பாதுகாக்க முடிகிறது.

நான்கு பெண்களை விட குறைவான பெண்களை மணம் முடித்த ஆணை ஒரு பெண் மணம் முடிப்பதற்கு இஸ்லாம் அனுமதிக்கிறது. ஆனால் ஆண்களில் தான் விரும்பியவரை (கணவனாக) தெரிவு செய்யும் மிகப் பெரிய உரிமை அவளுக்கு உண்டு.

## ௨௦. பரஸ்பர ஒத்துழைப்பையும் அன்பையும் காண்பிக்கும் மார்க்கம்

நீங்கள் அனைவரும் (குர்ஆன் எனும்) அல்லாஹ்வின் கயிற்றைப் பலமாக பற்றிப் பிடியுங்கள் நீங்கள் பிரிந்து விடாதீர்கள். நீங்கள் பகைவர்களாக இருந்த போது உங்களது உள்ளங்களுக்கிடையில் இணைப்பை ஏற்படுத்தி அவனது அருளினால் நீங்கள் சகோதரர்களாக மாறியதையும் நீங்கள் நரகக்குழியின் விளிம்பில் இருந்த போது அதைவிட்டும் உங்களை காப்பாற்றி உங்கள்மீது அல்லாஹ் புரிந்த அருட்கொடையைநினைவு கூருங்கள். நீங்கள் நேர்வழி பெறுவதற்காக இவ்வாறு அல்லாஹ் தனது வசனங்களை உங்களுக்குத் தெளிவுப்படுத்துகின்றான்.(3:103)

நன்மை செய்வதிலும் (அல்லாஹ்வை) அஞ்சி நடப்பதிலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருந்துக் கொள்ளுங்கள். மேலும் பாவம் செய்வதிலும், வரம்பு மீறுவதிலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்காதீர்கள்.(5:2)

## 21 – இம்மை, மறுமைக்கான மகிழ்ச்சிக்குரிய ஒரே பாதை இஸ்லாம்

‘‘அல்லாஹ்விடத்தில் நிச்சயமாக (அங்கீகரிக்கப்பட்ட) மார்க்கம் இஸ்லாம் தான். வேதம் கொடுக்கப்பட்டோர் தமக்கு அறிவு வந்த பின்னரும் தமக்குள் காணப்பட்ட பொறாமையின் காணரமாகவேயன்றி முரண்படவில்லை. எவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை நிராகரிக்கின்றார்களோ (அவர்களை) நிச்சயமாக அல்லாஹ் விசாரணை செய்வதில் தீவிரமானவன் (3:19)

‘‘யார் இஸ்லாம் அல்லாததை மார்க்கமாக ஏற்க விரும்புகின்றானோ அது அவனிடமிருந்து அங்கீகரிக்கப்பட மாட்டாது. அவன் மறுமையில் நஷ்டவாளிகளில் உள்ளவனாவான். (3:85)

## 3. நபிகளாரின் ஆளுமையைக் கண்டு வியந்துப் போன தலைவர்கள்.

வரலாறு நெடுகிலும் முஸ்லிம் அல்லாத தலைவர்கள் நபி (ஸல்) அவர்களின் ஆளுமையைப் பற்றி வியந்துப் பேசியுள்ளனர். இந்த வியப்பு இஸ்லாமிய தூதுத்துவத்தின் முக்கியத்துவத்தை காண்பிக்கின்றது. அவற்றில் சில பின்வருமாறு:

### • நெபோலியன் பெனபாத்

புனித அல்குர்ஆனுக்கு கட்டுப்பட்டு நீதியான, நியாயமான உலக ஒழுங்கை நிறுவுவதற்கு அனைத்து சமூகத்திலுள்ள புத்திஜீவிகளையும், கற்றறிந்தவர்களையும் ஒன்று சேர்க்கும் நாள் விரைவில் வரும் என எதிர்பார்க்கிறேன். இதுதான் இவ்வுலகில் ஒரே ஒரு யதார்த்தமாகும். இந்தக் குர்ஆன் மாத்திரமே மனிதத்தை சுபிட்சத்தின் பால் கொண்டு செல்லும்.

### • மகாத்மா காந்தி

“யங் இந்தியா” எனும் பத்திரிகையில் முஹம்மத நபியின் பண்புகள் பற்றி மகாத்மா காந்தி கூறிய கருத்துக்கள் பின்வருமாறு:

எவ்வித குழப்பங்களுமின்றி பலஇலட்சக்கணக்கான மக்களின் உள்ளங்களை ஆண்ட ஒருமனிதனின் பண்புகளை அறிய நான் விரும்பினேன்.

இஸ்லாம் அதன் ஸ்தானத்தை அடைவதற்கு வாள் காரணமாக இருக்க வில்லை என்பதைக் கண்டு பூரண திருப்திக் கொண்டேன். மாறாக முஹம்மத் நபியின் எளிமைத் தன்மையும் அவர் மேற்கொண்ட வாக்குறுதிகளில் உண்மையும், நேர்மையும் அவரை பின்பற்றியவர்களிடமும், நண்பர்களிடமும் காட்டிய அர்ப்பணிப்பும், தூய்மையும் இதற்குக் காரணம். மேலும் தன் இறைவன் மீது கொண்ட முழு நம்பிக்கையுடனான வீரமும், தனது தூதுத்துவத்திலுள்ள நம்பிக்கையுமே காரணமாகும்.

இப் பண்புகள் தான் இஸ்லாத்திற்கான பாதையை அமைத்தது. துன்பங்களை நீக்கியது. வாள் இஸ்லாத்தின் பரவலுக்கு காரணமல்ல. நபி (ஸல்) அவர்களின் சரிதையின் இரு பகுதிகளை வாசித்து முடிந்த பின் அவரது மகத்தான வாழ்க்கையின் அதிகமான பகுதி அறிய கிடைக்க வில்லை என்று உண்மையில் நான் கவலைப்பட்டேன்.

- **லாமார்டின்**

பிரான்ஸ் நாட்டின் கவிஞராகிய லாமார்டின் “துருக்கியர் வரலாறு” எனும் நூலில் சிறந்த தலைவருக்கான மூன்று அளவு கோல்களை முன்வைக்கிறார்

1 குறிக்கோளின் மகத்துவம்.

2 குறைந்த சாதனங்கள்.

3. வியக்கத்தக்க முடிவுகள்.

இந்த அளவு கோல்கள் உள்ளவர்களால்தான் சமூகத்தை உருவாக்க முடியும்.

தத்துவ ஞானி, போதகர், இறைத்தூதர், சட்டவல்லுனனர், போராளி, தீய சிந்தனைகளை தகரத்தெறிபவர், உருவ மற்றும் சிலை வழிபாடின்றி பகுத்தறிவு சிந்தனைகளை உயிர்பித்தவர், 20 வருடங்கள் உலக சாம்ராஜ்யத்தையும் ஆன்மீக சாம்ராஜ்யத்தையும் நிறுவிய ஒரே ஒரு தலைவர் முஹம்த நபி (ஸல்) அவர்களாவர். மனிதக்குலத்தின் மகத்துவத்தை அளவிடக்கூடிய அனைத்து நடவடிக்கைகைளயும் கவனிக்கும் போது எங்களுக்கு தெளிவாகும் செய்தி என்னவென்றால், முஹம்மதை விட மகத்துவம் பெற்ற ஒருவரை கண்டு கொள்ளமுடியுமா என்ற கேள்வியாகும்.

- **எட்வர்ட் கிப்ன்**

ஆங்கிளய வரலாற்று ஆசிரியர் எட்வட் கூறும் போது: கடவுள் இருப்பதாக நம்பிக்கை கொள்ளும் எந்தவொரு தத்துவவியலாளரும் நன்கு அறியப்பட்ட முஹம்மத் நபி கொண்டு வந்த மார்க்கத்தை ஏற்றுக் கொள்ளாமல் இருக்கு முடியாது தற்காலத்தில் எங்களுடைய புத்திகளை விட உயர்ந்த கொள்கை அது.

- **போஸ்வட் ஸ்மித்**

கீழேத்தியவாதியான ஆங்கிளயர் ஸ்மித் "ஆசியாவில் இலக்கியம்" எனும் நூலின் முன்னுரையில் பின்வருமாறு கூறுகிறார:

"முஹமத் நபி யின் வாழ்வு ஆரம்ப புள்ளியிலிருந்து இறுதி வரை உண்மையாகவே இருந்தது. முஹம்மத் நபி ஏககாலத்தில் அரசியல் தலைவராகவும், மதத் தலைவராகவும் இருந்தார். ஆனாலும் மதகுருவினர்களின் ஆணவம் அவரிடம் காணப்படவில்லை. கைஸர்களுக்கு இருந்தது போல் பிரமாண்ட படைஅணிகளோ, தயார் நிலையிலுள்ள படைகளோ, பிரத்தியோக காவலர்களோ, கட்டப்பட்ட அரண்மனைகளோ, நிரந்தரமான வருவாயோ அவரிடம் இருக்க

வில்லை. இறை ஆற்றல் மூலம் ஆட்சிசெய்த ஒருவர் இருப்பாரேயானால் அவர் முஹம்மத் ஆகத்தான் இருக்க வேண்டும். அவருடைய குடும்பத்தில் எவரது ஒத்தாசையுமின்றி எவ்வித கருவிகளும் இன்றி ஆட்சிப் பொறுப்பை தன்னகத்தே வைத்திருந்தார்.

- **ஆனிபேஸன்ட்**

பெண் உரிமை துறையில் பிரித்தானிய சமூக ஆர்வளரும், எழுத்தாளருமான ஆனிபேஸன்ட் “முஹம்மத் நபியின் வாழ்வும் போதனைகளும” எனும் நூலில் பின்வருமாறு கூறுகிறார:

“மகத்தான நபியின் வாழ்வையும் ஆளுமையையும் முழுமையாக கற்றறிவதும், அவர் எப்படி வாழ்ந்தார் தன் தோழர்களுக்கு எப்படி கற்றுக் கொடுத்தார் என்பதை அறிவதும் சாத்தியமற்றது. என்றாலும் இந்த வல்லமையுள்ள நபியின் கண்ணியத்தை உணர்வது சாத்தியமானது. அவர் இறைவனின் மிகப் பெரிய தூதர்களில் ஒருவர்.

அதிகமானவர்களுக்கு தெரிந்த பல விடயங்களை உங்களுக்கு கூறுகிறேன். நான் அவர் வரலாற்றை மீட்டும்போதெல்லாம் புதியதொரு வழியில் ஆச்சரியத்தை உணர்கிறேன். இந்த மகத்தான அரபு ஆசிரியர் மீது புதிய மரியாத உணர்வு ஏற்படுகிறது.”

- **ஜேம்ஸ் மிஷனர்**

நபி (ஸல்) அவர்களின் எளியதன்மை, மனிதத்தன்மை, புத்திக்கூர்மை உறுதிப்பாடு பற்றி ஜேமிஸ் சுட்டிக்காட்டி நபி (ஸல்) அவர்களிடத்தில் காண்பட்ட கருனையின் சில பக்கங்களை இப்படி விபரிக்கிறார:

“இஸ்லாத்தை நிறுவிய புத்திக்கூர்மைமிக்க முஹம்மத் (ஸல்) அவர்கள் சிலைகளை வணங்கிக் கொண்டிருந்த அரபு கோத்திரத்தாரிடையே ஆனாதையாக பிறந்து வளர்ந்தார். இவர் ஏழைகளையும் தேவையுடையோரையும், விதவைகளையும், அனாதைகளையும், அடிமைகளையும், ஒதுக்கப்பட்டவர்களையும், நேசிக்கக்கூடியவராக இருந்தார். வழக்கத்திற்கு மாறான தனது ஆளுமையின் மூலமாக அரபு தீபகற்பத்திலும், கிழக்குப்பகுதியிலும் புரட்சியை தோற்றுவித்தார். தன் கரங்களால் சிலைகளை தகர்த்து, அல்லாஹ் ஒருவனின் பால் அழைக்கும் மார்க்கத்தை நிலைநாட்டினார். பாலைவன சடங்குகள் விதித்திருந்த அடிமைத்துவ கட்டுப்பாட்டிலிருந்து பெண்களை காப்பாற்றினார். சமூக நீதியின் பால் அழைப்பு விடுத்தார். அவரது வாழ்வின் இறுதிப் பகுதியில் ஆட்சியாளராகவும், மதத்தலைவராகவும் இருக்கும் படி எடுத்துக் கூறப்பட்டது. அதற்கு முஹம்மத் நபி, அல்லாஹ்

அனுப்பிய தூதர்களில் தானும் ஒரு அடியான் என்றும் உலகமக்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனாகவும், நன்மாராயம் கூறுபவனாகவும் இருக்கப் போவதாகவும் உறுதியாக சொன்னார்.

(நூல்: "தவறாக புரிந்து கொள்ளப்பட்ட மார்க்கம்''. அமெரிக்கா பதிப்பகம் 1900 மே பக்கம் 68 – 70)

- **மைகல்ஹார்ட்**

வானிலையாளர், கணித மேதை, வரலாற்று ஆசிரியரான மைக்கல் ஹார்ட் "வரலாற்றில் தாக்கம் செலுத்திய 100 பேர" என்ற நுலை எழுதினார். அதில் ஜீஸஸ், மோஸே, அரிஸ்டாடில், புத்தர், கன்பூஷீயூஸ், ஹிட்லர், பிளேட்டோ, என்று இன்னும் பலர் பற்றியும் எழுதுகிறார். இதில் ஒவ்வொருவரும் ஏற்படுத்திய தாக்கத்தின் நிலைமைக்கேற்ப ஒன்றிலிருந்து நூறுவரை பட்டியலை தயாரித்து முஹம்மத் நபிக்கு முதல் இடத்தை வழங்கினார். இது பற்றி அவர் குறிப்பிடும் போது –

"மனித குலத்தில் மாபெரும் தாக்கத்தை ஏற்படுத்திய முதல் படிதரத்தில் முஹம்மத் நபியை நான் தெரிவு செய்ததையிட்டு சிலர் ஆச்சரியப்படலாம், வேறு சிலர் ஆட்சேபிக்கலாம். ஆனால் மார்க்க ரீதியாகவும், உலகரீதியாகவும் மகத்தான வெற்றியீட்டிய ஒரே மனிதர் அவர் மட்டும் தான்.

- **சரோஜினி நாயிடு**

இந்திய கவிஞரான சரோஜினி நாயிடு “இஸ்லாமிய முன்மாதிரிகள்” எனும் நூலில் பின்வருமாறு கூறுகிறார:

“இஸ்லாம் ஜனநாயகத்திற்கு அழைப்பு விடுத்து, அதனை நடைமுறைப்படுத்திய முதலாவது மார்க்கமாகும். தொழுகைக்காக பள்ளியில் அழைப்பு விடுக்கும் போது ஒரு நாளைக்கு ஐந்து முறை தொழுகைக்காக ஒன்று சேர்ந்து ஜனநாயகம் நிலைநாட்டப்படுகிறது. அதில் விவசாயியும் அரசரும் ‘அல்லாஹு அக்பர்’ எனக்கூறி தலைவணங்குகின்றனர். இயல்பாக மனிதர்களை சகோதரர்களாக உருவாக்குகின்ற இந்த ஒற்றுமை என்னை பல முறை வியப்பில் ஆழ்த்தியது.”

- **தோமஸ் கார்பல்**

(“வீரமும் வீரர்களின வழிபாடும” 1959 லண்டன் பதிப்பகம் எனும் நூர்லின் ஆசிரியர் இவர்)

“பழங்குடியினரையும், போராடும் நாடோடிகளையும், இரண்டு தசாப்தத்திற்கும் குறைவான காலத்தில் நாகரீகமுள்ள, வலிமைமிக்க சமுதாயமாக ஒன்றிணைக்க (முஹம்மத் என்ற) ஒரு தனிமனிதரால் எப்படி சாத்தியமானது?”

- **ஸ்தான்லி பவ்ல்**

பிரித்தானிய கீழேத்தியவாதியும் தொல்பொருள் ஆய்வாளருமான இவர் 1854 ஆண்டில் பிறந்தார்.

"முஹம்மத் நபி அன்புள்ளவராக இருந்தார். நோயாளியை நலம் விசாரிப்பார். ஏழைகளை சந்திப்பார். அடிமைகளின் அழைப்புக்கு பதிலளிப்பார். தன் கையால் ஆடைகளை தைத்துக் கொள்வார். எந்தச் சந்தேகமுமில்லை. அவர் கண்ணியமான நபிதான். அனாதையாகவும் ஏழையாகவும் வளர்ந்தார் பின்னர் மகத்தான வெற்றியாளராக மாறினார். (நூல: முஹம்மத நபியின் போதனைகளின் அட்டவனையிலுள்ள செய்திகள். – 1893)

- **ஜோர்ஜ் பெனாட் ஷா**

"**மனிதகுலத்தை மீட்டவர்** என்ற பட்டப் பெயரை முஹம்மத் நபிக்கு சூட்ட வேண்டும். அவரைப் போன்ற ஒருவர், இந்த நவீன உலகத்தை பொறுப்பேற்று வழிநடத்தினால் உலகம் தேடிக் கொண்டிருக்கும் சுபிட்சம் அமைதி ஊடாக எல்லாப் பிரச்சனைகளுக்கும் தீர்வை காண்பதில் வெற்றிகாண்பார். (நூல: உண்மையான இஸ்லாம். பாகம் 8 பக்கம் 1936)

## 4 இதுவரை கூறியதின் சுருக்கம்

மக்களை நாஸ்திகத்தின் பால் வழிநடாத்தக்கூடிய எந்தவொன்றும் இஸ்லாத்தில் இல்லை. மேலும் புதிர்களோ, மர்மங்களோ புத்தியை தடுமாறச் செய்யும் விடயங்களோ இல்லை.

இங்கு அனைத்துப் படைப்பினங்களையும் படைத்த ஒரே ஒரு இறைவன் (வணங்கப்படத்தகுதியானவன்) இருக்கிறான். மறுமை நாளில் அவனுக்கு முன்னால் எல்லாப் படைப்பினங்களையும் ஒன்று சேர்ப்பான்.

- அனைத்து சமுதாயத்தினருக்கும் ஒரே ஒரு தூதையும் சுபீட்சத்திற்கான ஒரேஒரு வழியையும் அல்லாஹ் அனுப்பிவைத்தான். அத்தூதுத்துவம் மிக எளிமையானதும் தெளிவானதுமாகும். அந்த தூதுத்துவம் சொல்வதுஇது தான்: **வணங்கி வழிப்படுவதற்கு தகுதியானவனான அல்லாஹ்வை நம்பிக்கைக் கொண்டு அவனுக்கு மட்டும் வழிபடுவது. நபி(ஸல்) அவர்கள் தனது சமூகத்தின் மத்தியில் ஒளி வீசும் விளக்கைப் போன்றவர். தன்னை பின்தொடர்கின்றவர்களின் பாதைக்கு அந்த விளக்கு வெளிச்சம் கொடுக்கின்றது. சுபீட்சத்தை அடைந்து கொள்வதற்கான**

**வழியையும் தெளிவுப்படுத்துகிறது. எனவே அல்லாஹ் ஒருவனை வணங்கி நபிகளாரின் போதனைகளையும் செயல்களையும் பின்பற்றுவதன்மூலமே இந்த சுபீட்சத்தை (ஒவ்வொருவரும்) பெற முடிகிறது. இதற்கு மாற்றமாக நபிமார்கள் அல்லாஹ்வுக்கு (மக்களுக்கும்) இடையில் தரகர்களாக இருக்கிறார்கள், அல்லது நபிமார்கள் கடவுள்ர்களாக இருக்கிறார்கள் என சிலர் தவறாக விளங்கிக் கொண்டிருப்பது போலல்ல!**

- இஸ்லாத்தில், ஆசாரியத்துவம் (குருத்துவம்) இல்லை. இஸ்லாம் அனைவருக்குமுரியது. அனைத்து மக்களும் அல்லாஹ்வுக்கு முன் சமமானவர்கள்.இந்த உலகில் அவர்கள் சம்பாதித்த செயல்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் ஏற்ப (மறுமையில்) விசாரணைகள் நடைப்பெறும். கோத்திரங்கள் இனங்கள் என்ற வேறுபாடு அங்கு காணப்படமாட்டாது. (முக்கியத்துவம் கொடுக்கப் படமாடடாது)

- அடியார்கள் அல்லாஹ்வுக்குச் செய்யவேண்டிய கடமை அவனை மாத்திரம் வணங்கி வழிபட்டு

அவனுடன் நேரடி தொடர்ப்பை பேணுவதுமாகும்

- எல்லாக் குழந்தைகளும் அல்லாஹ்வை ஏற்றுக் கொண்ட இயற்கை(யான இஸ்லாமிய) மார்க்கத்தில் பிறக்கின்றது. ஒரு குழந்தை தன்னைச் சூழ உள்ளவர்களின் தலையீடுஇன்றி வணக்க வழிபாடில் அல்லாஹ்வை முன்னோக்கி அவனிடம் எப்போதும் உதவி தேடும் இயற்கையிலே இருக்கிறது. பருவ வயதை அடைந்ததும் அவனுடைய செயல்களுக்கு பொறுப்புள்ளவனாகவும், அவனது கொள்கையிலும் சிந்தனையிலும் சுதந்திரம் பெற்றவனாகவும், அதிகாரமுள்ளவனாகவும் மாறிவிடுகின்றான். ஒன்றோ படைத்தவனுக்குக் கட்டுப்பட்ட இயற்கை மார்க்கத்தில் அவன் இருப்பான் அல்லது அல்லாஹ்வுக்கும் மனிதனுக்குமிடையில் தரகரை எடுத்துக் கொள்ளும் கொள்கையிலோ மதத்திலலோ இருப்பான்.

- மார்க்க ரீதியான குழந்தையின் அறிவு அதனைச் சூழ உள்ள (மார்கக்ப்பற்றுள்ள குடும்பம் மற்றும் கல்விசார் நிறுவனம்) இடமிருந்து வருகிறது இதன் மூலம் அல்லாஹ்வைப் பற்றிய சிந்தனைகளும் விளக்கங்களும் அல்லாஹ்வை

நேரடியாக வணங்குவது தொடர்ப்பாகவும் விதைக்கப்படுகின்றன.

- மார்க்க ரீதியான சூழலற்ற நிலை காணப்படும் போது அக்குழந்தைக்கு, கடவுளுக்கு இணையாளர்களும் தரகர்களும் (உதாரணமாக ஈஸா மர்யம் புத்தர் சிலைகள் முஹம்மத் நபி போன்றவர்களும்) இருக்கின்றனர் என்ற கல்வி அறிவு ஊட்டப்படுகின்றது.

- எனவே குழந்தைகளிடம் காணப்படும் மார்க்க நம்பிக்கை சூழலுடன் இணைந்துள்ளது எதிர்காலத்தில் அவனுடைய வணக்க வழிபாட்டில் அச்சூழல் பெரும் தாக்கம் செலுத்துகின்றது. அவன் தெரிவு செய்யக்கூடிய சுதந்திரம் அவனிடம் இருந்தாலும் அவன் பெரியவனாகின்ற போது சமூகத்தில் வாழையடி வாழையாக பெற்றுக் கொண்ட விடயத்தை மாற்றியமைப்பதில் பல சிரமங்களை எதிர் கொள்கிறான்.

- அடிப்படையான முதல்பாவம் என்ற சித்தாந்தம் இஸ்லாத்தில் இல்லை. அடுத்தவர்களின் பாவங்களுக்கு (இன்னுமொருவரை) பலிகொடுக்கும் நிலையும் இல்லை அல்லாஹ் ஒவ்வொரு மனிதனையும் இறையச்சம் மற்றும்

நற்செயல்களின் அடிப்படையில் சோதிக்கின்றான் .

- உயர்ந்த பண்பாடுகளின் பால் இஸ்லாம் அழைப்பு விடுத்து தீய செயல்களை தவிர்க்குமாறு கூறுகின்றது . (இப்பண்பாடுகள் இல்லாத போது தவறான) கலாசார பழக்கவழக்கங்களும், மார்க்கம் பற்றிய அறிவின்மையும் சில முஸ்லிம்களது தீய நடவடிக்கைகளுக்கு காரணமாகின்றது.

- இஸ்லாம் அறிவுடன் முரண்படுவதில்லை. அல்லாஹ்வை நம்பிக்கை கொள்ளாத மேற்கத்திய அறிஞர்களில் அதிகமானவர்கள் தங்கள் அறிவியல் கண்டுப் பிடிப்புகளின் மூலம் நிச்சயமாக படைப்பாளன் ஒருவன் இருக்கிறான் என்ற முடிவுக்கு வந்துள்ளனர் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

- இஸ்லாம் எந்த மனிதனின் பெயருடன் தொடர்ப்பானதல்ல அல்லது ஒரு இடத்துடனோ அல்லது கூட்டமைப்புடனோ தொடர்ப்பானதல்ல. மாறாக அல்லாஹ்வுடன் தொடர்ப்பானது.

- முழுமனித சமூகத்திற்கு தூய்மையான இஸ்லாமிய தூதுத்துவத்தைக் கொண்டு

முஹம்மத் நபியை அல்லாஹ் அனுப்பிவைத்தான்.

‘‘மனிதர்களே! நிச்சயமாக நான் உங்கள் அனைவருக்குமான அல்லாஹ்வின் தூதராவேன். வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அவனுக்கே உரியன. (உண்மையாக) வணங்கப்படத் தகுதியானவன் அவனைத் தவிர வேறு யாருமில்லை. அவனே உயிர்பிக்கிறான். இன்னும் மரணிக்கச் செய்கிறான் என்று நபியே! கூறுவீராக. ஆகவே நீங்கள் அல்லாஹ்வையும் (எழுத்தறிவற்ற) உம்மி நபியாகிய அவனது தூதரையும் நம்பிக்கைக் கொள்ளுங்கள். அவரும் அல்லாஹ்வையும் அவனது வார்த்தைகளையும் நம்பிக்கைக் கொள்கிறார். நீங்கள் நேர்வழி பெறும் பொருட்டு அவரையே பின்பற்றுங்கள். (7:158)

‘‘நபியே! மனிதர்கள் அனைவருக்கும் நன்மாராயம் கூறுபவராகவும் எச்சரிக்கை செய்பவராகவுமேயன்றி நாம் உம்மை அனுப்பவில்லை எனினும் மனிதர்களில் அதிக மானோர் அறியமாட்டார்கள்.(34:28)

இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வது இலகுவானது. இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதற்கு செய்யவேண்டியது என்னவென்றால் ‘‘அல்லாஹ்

ஒருவன் இருக்கிறான" என்று சாட்சி பகர்வதுடன் முஹமம்மத் நபிக்கு தூதுத்துவம் வழங்கப்பட்டது என சாட்சிபகர்வதாகும். இதனைத் தான் பின்வரும் வார்த்தை கூறுகிறது

أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ، وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ، ، وَ أَشْهَدُ أَنَّ رسل الله حَقٌّ، وَأَشْهَدُ أَنَّ الْجَنَّةَ حَقٌّ، وَأَنَّ النَّارَ حَقٌّ،

**நிச்சயமாக வணங்கப்படுவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை அவன் தனித்தவன் இணைதுணையற்றவன். நிச்சயமாக முஹம்மமத் அல்லாஹ்வின் அடியாரும், அவனது தூதருமாவார், என்று சாட்சிபகர்கிறேன். மேலும் இறைதூதர்கள் உண்மை என்றும் சுவனம் நரகம் உண்மை என்றும் சாட்சி பகர்கிறேன்.**